• For private circulation only

Book Post

www.tchsportal.co.in

# கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்

• விலை : ரூ 60 திசை தெரியாமல் திகைக்காதிருக்க திருச்சபை வரலாறு தெரியவேண்டும் • டிசம்பர் 2021 • இதழ் 19



புறஜாதிகளுக்குப் பிரகாசிக்கிற ஒளியாக
தேவரீர் சகல ஜனங்களுக்கும் முன்பாக
ஆயத்தம்பண்ணின உம்முடைய
இரட்சணியத்தை என் கண்கள் கண்டது








கிறிஸ்தவ

# வரலாற்றுச் சுவடுகள்

மாத ஆய்விதழ் சந்தா விபரம்

| சந்தா விபரம் | உள்நாடு |
|---|---|
| தனிப்பிரதி | ₹ 60 + நன்கொடை |
| ஆண்டு சந்தா | ₹ 600 + நன்கொடை |
| ஐந்து ஆண்டு சந்தா | ₹ 3000 + நன்கொடை |

“கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்” மாத ஆய்விதழை நீங்கள் தொடர்ந்து பெற்றுக் கொள்ள G-Pay மூலம் நன்கொடை செலுத்த 91767 80001 என்ற எண்ணுக்கு செலுத்தவும்
காசோலை மற்றும் வரைவோலை செலுத்த
‘திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்’
( Tinnevelly Christian Historical Society )
என்ற பெயரில் எடுக்கவும்

**சந்தாவை வங்கி கணக்கில் செலுத்த**

Bank :- Federal Bank
Name :- Tinnevelly Christian Historical Society
Account number :- 1748 0200 0036 84
IFSC Code :- FDRL0001748



**கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்,**
கதவு எண் 2-2-3(4), வடக்குத்தெரு,
பங்களாச் சுரண்டை-627859,
தென்காசி மாவட்டம் (தமிழ்நாடு)
04633 290401

| வடிவமைப்பு | பதிப்பாசிரியர் |
|---|---|
| சுஜித் ரெக்ஸ் | மன்னா செல்வகுமார் |
| 75388 12218 | 91767 80001 |

christianhistorical@gmail.com



# ஆசிரியர் சுவடு




கிறிஸ்துவுக்குள் அன்பான வரலாற்றுப் பிரியர்களே,

இறைமகனாம் இயேசு கிறிஸ்துவின் இனிதான நாமத்தினாலே உங்கள் அனைவருக்கும் அன்பின் வாழ்த்துக்களையும், வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

உபாகமம் 32;7ல் 'பூர்வநாட்களை நினை; தலைமுறை தலைமுறையாய்ச் சென்ற வருஷங்களைக் கவனித்துப்பார்; உன் தகப்பனைக் கேள், அவன் உனக்கு அறிவிப்பான்; உன் மூப்பர்களைக் கேள், அவர்கள் உனக்குச் சொல்லுவார்கள்' என்ற வார்த்தை இஸ்ரவேல் ஜனங்களுக்கு சொல்லப்பட்டது. அன்று பூர்வநாட்களை அறிந்து அதனை தங்கள் பிள்ளைகளுக்கு கற்று கொடுப்பது ஒவ்வொரு தகப்பனின் கடமையாக இருந்தது. ஆனால் இன்று அவசர உலகத்தில் பலர் இந்த கட்டளையை மறந்துப் போனவர்களாக இருக்கின்றோம். இன்றைக்கு இந்த உன்னதமான பணியினை, திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கத்தின் மூலமாக நிறைவேற்றி வருகின்றோம்.

நம் மத்தியில் ஊழியத்தினை நிறைவேற்றிய மிஷனெரிகளை நினைவு கூறவும், அவர்களுக்கு நம் பகுதி மக்கள் செய்த சிறப்பினை காண்பிக்கவும் இப்புத்தகம் பயன்படுத்தப்படுகிறது. இம்மாத புத்தகத்தில் நம் மத்தியில் ஊழியத்தினை நிறைவேற்றிய வெளிநாட்டு மிஷனெரிகளின் பெயர்களைத் தாங்கிய ஊர்களின் வரலாற்றையும், மிஷனெரிகளின் வரலாற்றையும் ஒன்றினைத்து தொகுத்துள்ளோம். வாசகர்களின் விமர்சனங்கள் வரவேற்கப்படுகின்றது. இப்புத்தகத்தில் வெளிவராத மிஷனெரிகளின் பெயரைத் தாங்கிய ஊர்களின் பெயர்கள் இருக்குமானால் அதனையும் தெரியப்படுத்தலாம்.

ஜனவரி மாதத்திற்கான தலைப்பாக **"மிஷனெரிகளின் தமிழ் இலக்கிய படைப்புகள்"** என்ற தலைப்பில் ஆய்வு கட்டுரைகள், துணுக்குகள், இலக்கிய படைப்புகளின் நூல் மதிப்புரை ஆகியவை வரவேற்கப்படுகின்றன. எழுத்தார்வம் உடையவர்கள் படைப்புகளை டிசம்பர் மாதம் 20 தேதிக்குள்ளாக அனுப்பித்தர கேட்டுக்கொள்ளுகின்றோம். வரலாற்று சுவடுகள் புத்தகத்தை நண்பர்களுக்கு அறிமுகப்படுத்த அன்போடு கூட கேட்டுக் கொள்ளுகின்றோம். ஒவ்வொரு மாதமும் அதிக பணசெலவுகள் உண்டு, காணிக்கைகள் மூலமாகவும் இவ்வூழியத்தினை தாங்க அன்போடு கூட கேட்டுக் கொள்ளுகின்றோம்.

வாசகர்கள் ஒவ்வொருவருக்கும் அன்பின் கிறிஸ்துமஸ் மற்றும் புதுவருட நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகின்றோம். ஆண்டவர் தாமே உங்கள் அனைவரையும் ஆசீர்வதிப்பாராக.

மன்னா செல்வகுமார்




தென்தமிழகத்தில் மிஷனெரிகளின் பெயர்களைத் தாங்கி நிற்கும்

# ஊர்களும் அவற்றின் சீர்மிகு வரலாறும்

### கத்தோலிக்க மிஷன் கிராமங்கள்

ஆண்டவர் இயேசு கிறிஸ்துவின் நேரடி சீடர் தூய தோமா அவர்களுக்குப் பின் தென்தமிழகத்தில் நற்செய்தி அறிவிக்க 1542ல் வந்தவர் இயேசு சபை கிறிஸ்தவ மிஷனெரியான தூய. சவேரியார் என அனைவராலும் அன்போடு அழைக்கப்படும் பிரான்சிஸ் சேவியர் (07.04.1506 - 03.12.1552) ஆவார். திருவனந்தபுரம் முதல் ராமேஸ்வரம் வரையிலான மேற்கு மற்றும் கிழக்கு கடலோரப் பகுதிகளிலும் மற்றும் கடலோரப் பகுதியை ஒட்டியுள்ள உள்நாட்டுப் பகுதிகளிலும் இவரால் நற்செய்தி சிறப்பாக அறிவிக்கப்பட்டது. இவர் மூலம் நற்செய்தியை அறிந்த கிராமத்தினரும் பிற்காலத்தில் அவர்களது வழிமரபினரும், சவேரியார்புரம், சவேரியார்நகர், சவேரியார் குடியிருப்பு என தாம் வாழ்ந்த வாழ்விடங்களுக்கு தங்களுக்கும் தங்கள் முன்னோருக்கும் நற்செய்தி அறிவித்த அவரது பெயரை நினைவுகூர்ந்து பெயர்சூட்டினர். மேலும் தூய சவேரியார் பெயரால் அமைக்கப்பட்ட தேவாலயங்களில் அமைந்த ஊர்களுக்கும் தெருக்களுக்கும் அவரது பெயர் சூட்டப்பட்டது.

தூத்துக்குடி அருகில் சவேரியார்புரம்,
திருச்செந்தூருக்கு அருகில் சவேரியார்புரம்,
விஜயநாராயணம் அருகில் சவேரியார்புரம்,
பேய்க்குளத்திற்கு அருகில் சவேரியார்புரம்,
மணப்பாறைக்கு அருகில் சவேரியார்புரம்
திருமயத்திற்கருகில் சவேரியார்புரம்,
திருச்சியில் சவேரியார்புரம், என சவேரியார் பெயர் தாங்கி ஊர்கள் உள்ளது.

ராஜசிங்கமங்கலம் அருகே சவேரியார் நகர்,
சாத்தான்குளத்திற்கு அருகில் சவேரியார்நகர்,
நாகர்கோவிலுக்கு அருகில் சவேரியார் நகர்,
கன்னியாகுமரிக்கு அருகில் சவேரியார் நகர், மணல் மாதா தேவாலயத்தை ஒட்டி சவேரியார் குடியிருப்பு என சவேரியார் பெயர் தாங்கி ஏராளமான ஊர்கள் உள்ளது.




தூய சவேரியார் பெயரை நிலைநாட்டும் வகையில் இன்றளவும் கடலோரப் பகுதிகளிலும் உள்நாட்டுப் பகுதிகளிலும் ஏராளமான ஊர்களுக்கு தெருக்களுக்கு இவர் பெயர் சூட்டப்பட்டு வருகிறது. மேலும் அவரது பெயரை பிரதிபலிக்கும் வகையில் தங்களது பிள்ளைகளுக்கும் சவரிதாஸ், சவரிமுத்து, சவரிராயர், சவரிராஜ், சவரியம்மாள் என பெயர் சூட்டி வருவது குறிப்பிடத்தக்கது.

'சவேரியார் பணி செய்த இடத்தில் நான் பணி செய்ய வேண்டும்' என்ற விருப்பத்தோடு தென் தமிழகத்திற்கு நற்செய்தி பணியாற்ற வந்த இயேசு சபை மிஷனெரி ஜான் டி பிரிட்டோ (01.03.1647 - 04.02.1693) தனது பெயரை அருளானந்தர் என தமிழ்ப்படுத்திக்கொண்டார். தூய சவேரியாரைப் போன்று சிறப்பாக நற்செய்தி பணியாற்றிய இவர் பெயராலும் அருளானந்தபுரம் அருளானந்தநகர் என அவரால் நற்செய்தி அறிந்துகொண்டவர்களும் அவர்களது பிற்கால வழி மரபினரும் தங்களது ஊர்களுக்கு, தெருக்களுக்கு அவரது பெயரைச் சூட்டியிருப்பதை தென்தமிழகத்தில் காணலாம்.

ஸ்ரீவைகுண்டம் தாலுகா அங்கமங்கலம் கிராமத்தின் அருகில் அருளானந்தபுரம், உடன்குடிக்கு அருகில் அருளானந்தபுரம் திருச்செந்தூருக்கு அருகில் அருளானந்தபுரம் திக்கணங்கோடு கல்குளம் அருகில் அருளானந்தபுரம் இடைக்காட்டூருக்கருகில் அருளானந்தபுரம், திண்டுக்கல்லுக்கு அருகில் அருளானந்தநகர் தஞ்சாவூர் அருகில் அருளானந்தநகர் என்பவை உட்பட பல ஊர்களுக்கு இவரது பெயர் சூட்டப்பட்டுள்ளது.



இவரது பெயரால் அமைக்கப்பட்ட தேவாலயம் உள்ள பகுதிகளுக்கும் இவரது பெயர் சூட்டப்பட்டுள்ளது. இவ்விருவருக்கும் பின்னர் நீண்ட பல ஆண்டுகள் கழித்து நற்செய்தி பணியாற்றும் படியாக வந்த இயேசு சபை மிஷனரியும் இயேசுவின் திரு இருதய சகோதர சபையின் நிறுவனரும் ஆகிய கௌசானல் அவர்களின் பெயராலும் கௌசானல் புரம் என அவர் பணி செய்த பாளையங்கோட்டை பகுதியில் பெயர் சூட்டப்பட்டுள்ளது.

## சீர்திருத்த கிறிஸ்தவ மிஷன் கிராமங்கள்

### போலையர்புரம்

கனம். கிறிஸ்டியான் போல் ஐயரவர்கள் (09.03.1744 - 28.01.1818) திருச்சிராப்பள்ளியை தலைமையிடமாகக் கொண்டு மிஷனெரி பணி செய்து வந்தார்கள். அந்நேரம் 1779 ஆம் ஆண்டு ஜீன் ஜீலை மாதங்களில் அக்கால ஒன்றுபட்ட திருநெல்வேலி மாவட்டத்தில் ஊழியம் செய்தார்கள். அப்போது சாத்தான்குளம் வட்டாரத்திலுள்ள செந்தில்காத்தபுரத்து மக்கள் கனம். கிறிஸ்டியான் போல் ஐயரவர்கள் மூலம் கிறிஸ்தவ நற்செய்தி ஏற்றுக்கொண்டார்கள். தங்களது ஊருக்கு அவரது பெயரின் நினைவாக போலையர்புரம் என பெயரிட்டார்கள் கனம் ரேனியஸ் ஐயரவர்களின் மூலம் அந்த ஊரில் பள்ளிக்கூடம் தொடங்கப்பட்டது. இன்று சேகர தலைமையிடமாக இந்த ஊர் திருச்சபை காணப்படுகிறது.

### ஹாஃப்பையர்புரம்

திருநெல்வேலி திருமண்டலத்தில் கடாட்சபுரம் வட்டாரத்தில் கடாட்சபுரத்திற்கு அருகில் ஆத்திக்காடு என்ற கிராமத்தில் 1803/1804 இல் கனம். சத்தியநாதன் ஐயரவர்களின் நற்செய்தி பணியால் சபை உருவானது. ஏசுவடியான் என்ற சபை ஊழியரும் இந்த ஊருக்கு நியமிக்கப்பட்டார். 1817 ஆம் ஆண்டு பாளையங்கோட்டையில் ராணுவ குருவானவராக பணிசெய்த மற்றும் SPCK மிஷன் சார்பிலான திருச்சபைகளையும் கண்காணித்து வந்த கனம். ஜேம்ஸ் ஹாஃப்வ் ஐயரவர்கள் (1789 - 02.11.1847) இவ்வூரில் நற்செய்தியை அறிவித்ததோடு ஒரு தேவாலயத்தையும் கட்டி முடித்தார்கள். அவருக்குப் பின்னர் பாளையங்கோட்டையைத் தலைமையிடமாகக் கொண்டு புதிதாக உருவாக்கப்பட்ட CMS மிஷன் சங்கப் பணித்தளத்தில் முதல் தலைமை மிஷனெரியாக கனம்.ஹாஃப்வ் ஐயரவர்களின் அழைப்பின்பேரில் அனுப்பப்பட்ட கனம்.இரேனியஸ் ஐயரவர்களின் மூலம் ஆத்திக்காடு கிராமத்தார் மீண்டும் நற்செய்தியை அறிந்து தங்களை புதுப்பித்துக் கொண்டார்கள். தங்களுக்கு நற்செய்தியை அறிவித்ததோடு தேவாலயத்தையும் கட்டிக்கொடுத்த கனம்.ஹாஃப்வ் ஐயரவர்கள் குறித்தும் கனம்.இரேனியஸ் ஐயரவர்களிடம் பகிர்ந்து கொண்டார்கள் 1830 இல் இவ்வூரில் CMS மிஷன் பள்ளிக்கூடத்தை ரேனியஸ் ஐயரவர்கள் தொடங்கினார்கள்.

கனம்.ஹாஃப்வ் ஐயரவர்களை நினைவு கூறும் வண்ணம் இந்த ஊருக்கு ஹாஃப்பையர்புரம் என்று ரேனியஸ் ஐயரவர்கள் பெயரிட்டார்கள்.அன்று முதல் இன்று வரை இதே பெயரில் இவ்வூரும் இத்திருச்சபையும் அந்த தொடக்ககால மிஷனெரியை நினைவு கூறும் வகையில் செயல்பட்டு வருகிறது.

### கிறிஸ்டியாநகரம்

அநேக சிறிய கிராமங்களை (சந்தையடியூர், வில்லிகுடியிருப்பு, பண்டாரஞ்செட்டிவிளை, ஆதியாக்குறிச்சி உட்பட பல கிராமங்கள்) உள்ளடக்கியதாக உடன்குடி காணப்பட்டது. 1839 இல் SPG மிஷனெரியாக Rev. கிறிஸ்டியான் சாமுவேல் கோலாப் ஐயரவர்கள் (04.05.1815 - 03.12.1881) முதலூருக்கு நியமிக்கப்பட்டார்கள். முதலூரில் இருந்து 8 கிலோமீட்டர் தொலைவிலுள்ள ஆதியாக்குறிச்சி கிராமத்திற்கு அடிக்கடி சென்று நற்செய்தி அறிவித்து அதன் பயனாக அந்த கிராமத்தார் அனைவரும் முழுமையாக கிறிஸ்தவத்தை ஏற்றார்கள். ஆதியாக்குறிச்சி கிராமத்தாருக்கு நற்செய்தி அறிவித்த மிஷனெரி கிறிஸ்டியான் சாமுவேல் கோலாப் ஐயரவர்கள் பெயரை முன்வைத்து அந்த கிராமத்திற்கு கிறிஸ்டியாநகரம் எனப்பெயரிடப்பட்டது.

அவரைத் தொடர்ந்து 1844 ஆம் ஆண்டு மிஷனெரியாக கிறிஸ்டியாநகரம் கிராமத்திற்கு வருகை தந்த கனம்.J.K.பெஸ்ட் ஐயரவர்கள் 1844 - 1856 வரை இங்கு பணிசெய்தார்கள். அக்காலத்தில் இக்கிராமத்தில் அவர் பள்ளியைத் தொடங்கினார். அப்பள்ளி இன்று மேல்நிலைப்பள்ளியாகச் செயல்பட்டு வருகிறது. கிராமத்தை அடுத்துள்ள பண்டாரஞ்செட்டிவிளைக்கு நற்செய்தி அறிவிக்கப்பட்டது. அங்கு தொடங்கப்பட்ட பெண்கள் பள்ளிக்கு பிற்காலத்தில் பெஸ்ட் ஐயரவர்களின் மனைவி பெயரான மேரி ஆன் பெஸ்ட் என்ற பெயர் சூட்டப்பட்டுள்ளது. கிறிஸ்டியாநகரத்தில் மேல்நிலைப்பள்ளி அமைந்துள்ள இடம் தேவாலயம் அமைந்துள்ள இடம் மிஷன் பங்களா அமைந்துள்ள இடம் அனைத்தும் பெஸ்ட் ஐயரவர்களால் வாங்கப்பட்டவை ஆகும். இவரது காலத்தில் கிறிஸ்தியாநகரம் தேவாலயம் கட்டப்பட்டு 25.01.1849 இல் பிரதிஷ்டை செய்யப்பட்டது. பிரதிஷ்டை ஆராதனையை சார்ஜென்ட் ஐயரவர்கள் நடத்த அருட்செய்தியை கால்டுவெல் ஐயரவர்கள் வழங்கினார்.

இவருக்குப் பின்னர் சில ஆண்டுகள் கழித்து கிறிஸ்டியா நகரத்தில் 1866 - 1877 ஆண்டுகளில் சுமார் 12 ஆண்டுகள் பணிசெய்த யோபு ஐயரவர்கள் காலத்தில் இந்த கிராமத்து சபை ஆவிக்குரிய வாழ்வில் பெரும் வளர்ச்சியைப் பெற்றது. அதற்கு மூல காரணமாக இருந்தது ஐயர் அவர்களின் மனைவி செல்வம் யோபு அம்மாள் ஆவார். இருவராலும் வீட்டுக்கு ஒரு வேதாகமம் என்ற அடிப்படையில் அனைத்து வீடுகளுக்கும் வேதாகமம் வழங்கப்பட்டது. யோபு ஐயரவர்கள் கடையனோடையையும் செல்வம் யோபு அம்மாள் நாசரேத்தையும் சார்ந்தவர்கள். புகழ்வாய்ந்த எஸ்.பி.ஜி மிஷனெரி என அழைக்கப்பட்ட நாசரேத்தின் பிரதான முக்கந்தரான கருப்பன் முக்கந்தர் அவர்களின் மகனான சுவாமியடியான்



உபதேசியார் அவர்களின் ஒன்பது பிள்ளைகளில் (8ஆண்+1பெண்) ஒருவரே செல்வம் யோபு அம்மாள் ஆவார். இவர் தம் தந்தையைப் போன்று இசைத்திறமையும், சித்த வைத்திய திறமையும், ஆளுமை திறமையும் கொண்ட இவர் தம் கணவரோடு சேர்ந்து மிகச்சிறப்பாக செயலாற்றினார். இவர் கிறிஸ்தியா நகரத்தின் பரிசுத்தவாட்டி என இன்றளவும் அழைக்கப்படுகிறார்.

**டக்கர்புரம்**

தென்தமிழக திருச்சபைகளின் வளர்ச்சிக்கு டக்கர் குடும்பத்தினரின் பங்களிப்பு மிகமிக முக்கியமானது மெட்ராஸ் மாகாண சி. எம். எஸ் மிஷன் கமிட்டி செயலாளராக, பண்ணை விளையை தலைமையிடமாகக் கொண்ட வட்டார தலைமை மிஷனெரியாக, பாளையங்கோட்டையில் பெண்கள் கல்வி வளர்ச்சிக்கான பெண்கள் பள்ளிக்கூடம் தொடங்குவதற்கு காரணமானவர்கள் என டக்கர் குடும்பத்தினர் இருந்துள்ளனர். தொடக்க காலத்தில் மெட்ராஸ் மாகாண C.M.S. மிஷனின் செயலாளராக பணி செய்த டக்கர் அவர்களது நினைவாக உருவாக்கப்பட்ட கிறிஸ்தவ கிராமம் டக்கர்புரம். இங்கு அப்போஸ்தலர் தூய பேதுரு தேவாலயம் கட்டப்பட்டு பிரதிஷ்டை செய்யப்பட்டது. இக்கிராமம் முதலூருக்கு அருகாமையில் இருந்ததால் முதலூர் சேகரத்துக்கு உட்பட்ட கிராமமாக காணப்படுகிறது இன்றளவும் முதலூர் சேகரத்தில் சிறந்த திருச்சபையாக டக்கர்புரம் காணப்படுகிறது.

**டக்கரம்மாள்புரம்**

திருநெல்வேலியில் நடைபெற்றுவந்த CMS மிஷனின் நற்செய்தி பணிகள் மற்றும் கல்வி பணிகளுக்கு இங்கிலாந்து நாட்டில் பொருளாதார உதவி செய்யும் ஆதரவாளர்களை தேடித்தந்ததில் முக்கிய பங்கு வகித்தவர்கள் சாராள் டக்கர் அம்மையார் அவர்களும் அவர்களுடைய நண்பர்களும் ஆவர். 1857 இல் சாராள் டக்கர் அம்மையார் அவர்கள் மரணமடைந்தார்கள்.

1867 இல் சாராள் டக்கர் அம்மையார் மரணமடைந்து 10 ஆண்டுகள் நிறைவடைந்ததை முன்னிட்டு நினைவுச்சின்னம் ஏற்படுத்த தீர்மானித்த சாராள் டக்கர் அம்மையார் அவர்களின் நண்பர்கள் அதற்காக பணம் சேகரித்து 1860 இல் பாளையங்கோட்டை தலைமை மிஷனெரி சார்ஜண்ட் ஐயரவர்களுக்கு அனுப்பி வைத்தார்கள். அந்தப் பணத்தைக் கொண்டு பாளையங்கோட்டைக்கு தெற்கே 4 மைல் தொலைவில் நாகர்கோவிலுக்கு செல்லும் சாலையில் பெரிதானதோர் நிலம் வாங்கி 1869 இல் கிறிஸ்தவ குடும்பங்களை அங்கே குடியேறினார்கள் அந்த புதிய குடியேற்ற கிறிஸ்தவ கிராமத்திற்கு டக்கரம்மாள்புரம் என்ற பெயரை 1869ல் சூட்டினார்கள்.

**யாக்கோபுபுரம்**

1838 இல் முதலாம் மற்றும் இரண்டாம் தோள்சீலை போராட்டத்தின் பொது தலைமை தாங்கிய LMS மிஷனெரி சார்லஸ் மீட் ஐயர் அவர்கள் தம் மூடுபனி செய்துவந்த மிஷனெரி ஜேம்ஸ் ரசல் அவர்களை பிச்சை குடியிருப்பு பகுதிக்கு ஊழியம் செய்யும்படிக்கு அனுப்பினார்கள். அந்த காலகட்டத்தில் ராமலிங்கபுறத்தில் வாழ்ந்து வந்த பொன்னணைந்தபெருமாள் அவர்களது பேரன் சுடலை ஆடும் பெருமாள் தனது குடும்பம் மற்றும் தனது இரு தம்பிகளின் குடும்பத்துடன் அந்த இடத்திலிருந்து குடிபெயர்ந்து பழவூருக்கு கிழக்கே இரண்டு மைல் தொலைவிலுள்ள ஓரிடத்தில் குடியமர்ந்தார்கள்.. ஜேம்ஸ் ரஸ்ஸல் அவர்கள் குதிரை மீதமர்ந்து அந்தப் பகுதி கிராமங்களில் கிறிஸ்தவ நற்செய்தி அறிவித்து வந்தார்கள். அவர்களிடம் கிறிஸ்தவ நற்செய்தியை அறிந்துகொண்ட சுடலை ஆடும் பெருமாள் சுவாமிநாதன் என்ற பெயரில் திருமுழுக்குப் பெற்று அவ்வூரின் முதல் கிறிஸ்தவர் ஆனார். அவரை தொடர்ந்து அந்த புதிய குடியேற்றத்தில் குடியமர்ந்த அனைவரும் கிறிஸ்தவர்கள் ஆனார்கள் தங்களுக்கு கிறிஸ்தவ நற்செய்தி அறிவித்த மிஷனரி ஜேம்ஸ் ரசல் ஐயரவர்களது பெயரை தாங்கள் வாழும் இடத்திற்கு யாக்கோபுபுரம் என்ற பெயரில் சூட்டிக் கொண்டார்கள். (புதிய ஏற்பாட்டு ஜேம்ஸ் தமிழில் யாக்கோபு எனப்படுகிறார்)

1852 இல் பனை ஓலையை மேற்கூரையாகக் கொண்ட தேவாலயம் கட்டப்பட்டு தூய.பர்னபா பெயரில் பிரதிஷ்டை செய்யப்பட்டது. 1865 வரை கனம். ஜேம்ஸ் ரசல் ஐயரவர்களது மேற்பார்வையில் திருச்சபை மிகச் சிறப்பாக வளர்ந்து வந்தது.

1865 இல் LMS மற்றும் SPG மிஷன்களுக்கிடையே எல்லைப் பிரச்சனை ஏற்பட்டபோது கனம் கால்டுவெல் ஐயர் அவர்கள் மூலமாக ஒரு சமாதானத் தீர்வு எட்டப்பட்டது. அதன்படி 'திருநெல்வேலி மாவட்ட எல்லைக்குள் வரும் சபைகள் எந்த மிஷன் சபையாக இருந்தாலும் அதை எஸ்.பி.ஜி மிஷன் சபைகளாகவும், திருவாங்கூர் சமஸ்தான எல்லைக்குள் வருகிற சபைகள் எந்த சபைகளாக இருந்தாலும் அதை எல்.எம். எஸ் சபைகளாகவும் ஏற்பது.' அதன்படி யாக்கோபுபுரம் சபை திருநெல்வேலி திருமண்டலத்திற்கு உட்பட்ட எஸ்.பி.ஜி சபையாக மாறினது. தொடக்ககால தேவாலயம் மிகச்சிறியதாக இருந்தபடியால் பெரிய தேவாலயம் கட்டப்பட்டு 27.12.1905 இல் அப்போஸ்தலர் ஜேம்ஸ் பெயரால் தூய. யாக்கோபு தேவாலயம் என்ற பெயரில் பிரதிஷ்டை செய்யப்பட்டது.

**ஜேம்ஸ் டவுன்**

மானவீரவளநாடு என அழைக்கப்பட்ட மாநாடு தேரி வட்டாரம் திருச்செந்தூர் முதல் திசையன்விளை வரை பரவிக் கிடந்தது. இப்பகுதியில் 17ஆம் 18ஆம் நூற்றாண்டு காலகட்டத்தில் குழப்பமான அரசியல் சூழ்நிலை இருந்தது. பெரு வெள்ளமும் வறட்சியும் மாறி மாறி வந்தது அவற்றைத் தொடர்ந்து விஷ காய்ச்சல் மற்றும் காலரா அந்த வட்டார மக்களை தாக்கியது எனவே அங்குள்ள மக்கள் தென்பகுதியில் அக்காலத்தில் தென் திருவாங்கூர் அகத்தீஸ்வரம் வட்டாரத்திற்கும் மேல் பகுதியில் மேற்கு திருநெல்வேலி மற்றும் தற்போதைய தென்காசி மாவட்டத்திற்கும் இடப்பெயர்ச்சி செய்தனர். 1685 காலகட்டத்தில் கொம்மடிக்கோட்டை காயாமொழி பூச்சிகாடு குட்டம் ஆனைகுடி ஒட்டாரம்பட்டி ஆகிய கிராமங்களில் இருந்த பெரும்பாலான மக்கள் தென் திருவாங்கூர் கிராமங்களிலும் அதன் எல்லையோர கிராமங்களிலும் குடியேறினர். ஆனைகுடி ஒட்டாரம் பட்டி என்ற கிராமத்தைச் சார்ந்த பிச்சை என்பவர் தென்கிழக்கு திருவாங்கூரில் எல்லையோரம் சர்வே எண் 5049 இல் தன் குடும்பத்துடன் குடியேறினார். பருத்தி விவசாயமும் பருத்தி வியாபாரமும் பிச்சை செய்து வந்தார். அவர் குடியேறிய பகுதி பிச்சை குடியிருப்பு என அழைக்கப்பட்டது.

இன்று அப்பகுதி ரஜகிருஷ்ணாபுரம் பிச்சை குடியிருப்பு ஜேம்ஸ் டவுன் என மூன்று பகுதிகளாக உள்ளது அதில் ராஜகிருஷ்ணபுரம் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ளது.

பிச்சைக்கு மூன்று மகன்கள். ஞானக்கண், ஞானமுத்து, திருமாலப் பெருமாள்

1784 இல் சுவார்ட்ஸ் ஐயரவர்களுக்கு ஞானப்பிரகாசம் உபதேசியார் அவர்கள் அனுப்பிய அறிக்கை மூலம் 1784 முதல் பிச்சை குடியிருப்பு பகுதியில் கிறிஸ்தவ நற்செய்தியை அறிவிக்கிற சீர்திருத்த கிறிஸ்தவம் மிஷனரிகளின் பணி தொடங்கியதையும் பிச்சை குடியிருப்பு சபை உருவாவதையும் அறியமுடிகிறது. பிச்சை குடியிருப்பு சபை இடையன்குடி எஸ்.பி.ஜி ரேஞ்சுக்கு உட்பட்டதாக இருந்தது. மயிலாடியைத் தலைமையிடமாகக் கொண்டு பணிசெய்த ரிங்கல்தௌபே இந்த சபையாரை குறித்து விசாரித்து எஸ்.பி.எம். ஜி என பதிவேட்டில் அது குறித்து குறிப்பிட்டுள்ளார். 1810 இல் பிச்சை குடியிருப்பு சபை ரிங்கல்தௌபே மேற்பார்வையில் இருந்த சபையாகவும் அதில் 32 திருமுழுக்குப் பெற்றவர்கள் இருந்துள்ளனர் என்பதையும் குறிப்புகள் மூலம் அறிகிறோம். ரிங்கல்தௌபேக்குப் பின்னர் பிச்சை குடியிருப்பு சபையை பெரிதும் நேசித்து அங்கே தங்கியிருந்து சபை வளர்ச்சி அடையச் செய்தவர் கனம்.ஜேம்ஸ் ரஸல் ஐயரவர்கள்.

1838 இல் பிச்சை குடியிருப்பு பகுதிக்கு இவர் எல்.எம்.எஸ் மிஷன் மிஷனெரியாக அனுப்பப்பட்டார் பிச்சை குடியிருப்பு ஊரின் தென் எல்லையில் பெரும்பகுதியை பிச்சை அவர்களது வழிமரபினரிடமிருந்து. எல். எம். எஸ். மிஷனுக்கு என பெரிதானதோர் இடத்தை விலை கொடுத்து வாங்கி அதற்கு தமது பெயரில் ஜேம்ஸ் டவுன் என பெயரிட்டு அந்த இடத்தை புதிய வட்டாரத்தின் தலைமையிடமாக மாற்றினார். அந்த இடமே இன்றளவும் ஜேம்ஸ் டவுன் என அழைக்கப்படுகிறது. 1838 இல் நாகர்கோவில் எல்.எம்.எஸ் மிஷன் வட்டாரம் இரண்டு பாகமாக பிரிக்கப்பட்டு மேற்கு பாகம் நாகர்கோவில் சார்லஸ் மால்ட் ஐயரவர்கள் பொறுப்பிலும் மேற்கு பாகம் ஜேம்ஸ் ரசல் ஐயரவர்களின் பொறுப்பிலும் ஒப்படைக்கப்பட்டது அந்நேரம் இருபது சபைகள் இந்த பிச்சைகுடியிருப்பு ஜேம்ஸ் டவுன் மிஷன் சேகரத்தின் கீழ் இருந்தன.

### ஜம்புரோபுரம்

1909 ஆம் ஆண்டில் திருநெல்வேலி மாவட்டத்தின் தென் பகுதியைச் சார்ந்த குடும்பத்தினர் சிலர் மதுரையில் வைகை ஆற்றின் வடபுறம் அமெரிக்கன் கல்லூரிக்கு அருகில் குடியேறியிருந்தனர் அவர்கள் ஞாயிறுதோறும் வைகை ஆற்றைக் கடந்து மதுரை கீழவாசல் தேவாலயத்திற்குச் சென்று ஞாயிறு வழிபாட்டில் கலந்துகொண்டு வந்தனர். அக்காலத்தில் அமெரிக்கன் கல்லூரியின் முதல்வராக இருந்த அமெரிக்கன் மிஷன் மிஷனெரி கனம். வில்லியம் மைக்கேல் ஜம்புரோ அவர்கள் கல்லூரியின் பக்கத்தில் குடும்பமாக குடியிருந்து வந்தார்கள். தம் வீட்டிற்கு அருகாமையில் உள்ள மக்கள் நீண்ட தொலைவு கடந்து சென்று ஞாயிறு வழிபாட்டிற்கு சென்று வருவதை நேரில் கண்ட அவர் அமெரிக்கன் கல்லூரியின் பக்கத்தில் சிற்றாலயம் ஒன்றைக் கட்டிக் கொடுத்து அங்கு வழிபாடு நடத்துவதற்கு சபை ஊழியர் ஒருவரை நியமித்து அந்த தேவாலயத்திற்கு உதவிகளைச் செய்து வந்தார்கள். தேவாலயத்திற்கு மணியையும் அமெரிக்காவிலிருந்து கொண்டு வரச் செய்தார்கள். அமெரிக்கன் கல்லூரியிலும் கல்லூரி மேல்நிலைப் பள்ளியிலும் மாணவர் எண்ணிக்கை படிப்படியாக வேகமாக உயர்ந்தது. ஆகவே அவற்றை விரிவுபடுத்த வேண்டும் என்ற சூழ்நிலை உருவானது. ஆதலால் கல்லூரிக்கு அருகில் இருந்த அந்த இருபத்தி மூன்று குடும்பத்தினரையும் கனம். ஜம்புரோ அவர்கள் அணுகி அந்த இடத்தை கல்லூரிக்கு கட்டிடங்கள் கட்டுவதற்கு அவர்கள் அன்பளிப்பாக கொடுக்கவும், அதற்கு இணையாக பெரிதானதோர் நிலம் வாங்கி அதில் அந்த இருபத்தி மூன்று குடும்பத்தினரையும் தாம் குடியேற்றுவது என்றும் அவர்கள் வீடு கட்டுவதற்கு பணம் அன்பளிப்பாக வழங்குவது என்றும் வாக்கு கொடுத்தார்கள். அதை அந்த 23 குடும்பத்தினரும் ஏற்றுக் கொண்டார்கள்.



1915 இல் அந்த 23 குடும்பத்தினருக்கும் வீடு கட்டுவதற்கு நிலமும் பணமும் அன்பளிப்பாக வழங்கப்பட்டது அவர்களுக்கு கொடுக்கப்பட்ட நிலத்தின் அருகாமையில் தேவாலயம் கட்ட தனி இடம் கொடுக்கப்பட்டது. அந்த இடத்தில் குடியமர்ந்த அனைவரும் தங்களுக்கு இந்த உதவியைச் செய்த அமெரிக்கன் மிஷன் மிஷனெரி கனம். ஜம்புரோ அவர்கள் நினைவாக புதிய குடியேற்றத்திற்கு ஜம்புரோபுரம் என பெயரிட்டார்கள். அந்த இடத்தில் 1917 இல் தேவாலயம் கட்டப்பட்டது.

### நீல்புரம்

திருச்செந்தூர் வட்டாரம் சோனகன் விலையில் இருந்து சில கிலோ மீட்டர் தொலைவில் உள்ள கிறிஸ்தவ கிராமம் நீல்புரம். பேராயர் மகாகனம். ஸ்டீபன் நீல் அவர்கள் (31.12.1900 - July 1984) நினைவாக இந்தக் கிராமத்திற்கு நீல்புரம் எனப் சூட்டப்பட்டுள்ளது. பேராயர்.மகாகனம் ஸ்டீபன் நீல் அவர்கள் 22 ஆண்டுகள் C.M.S. மிஷனில் ஊழியம் செய்தவர்கள். 1939 முதல் 1945 வரை நெல்லை திருமண்டலப் பேராயர் ஆகப் பணி செய்தவர்கள். நீல்புரம் கிராமத்தில் தேவாலயம் கட்டப்பட்டு தூய திரித்துவ ஆலயம் என்ற பெயரில் 1969 இல் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது.

### ரேனியஸ் நகர்

நெல்லை அப்போஸ்தலர் என புகழ்ந்து அழைக்கப்படும் கனம். C.T.E. இரேனியஸ் ஐயர் அவர்கள் (05.11.1790 - 05.06.1838) 1820 முதல் 1838 வரை பாளையங்கோட்டையை தலைமையிடமாகக் கொண்டு, அக்கால திருநெல்வேலி மாவட்டம் எங்கும் குதிரை மீது அமர்ந்து பயணம் செய்து கிராமம் கிராமமாக நற்செய்தி அறிவித்ததன் பயனாக சுமார் 400 திருச்சபைகளும் சுமார் 150 பள்ளிக்கூடங்களும் உருவாக்கப்பட்டன. ரேனியஸ் ஐயரவர்கள் தென்மேற்கு மற்றும் மேற்கு திருநெல்வேலி பகுதிகளில் அதிக கவனம் செலுத்தி ஊழியம் செய்து வந்தார்கள். மேற்கு திருநெல்வேலிக்கு தலைமையிடமாக ஆலங்குளத்தை அடுத்த

நல்லூர் தலைமையிடமாக இருந்தது. ரேனியஸ் ஐயரவர்களை நினைவு கூறும் வண்ணம் ஆலங்குளம் சேகரத் திருச்சபை சார்பில் ஆலங்குளத்தில் வடக்கு பகுதியில் பெரிதான நிலம் வாங்கப்பட்டு தேவாலயம் கட்டப்பட்டது. அந்த இடத்திற்கு ரேனியஸ் நகர் எனப் பெயரிடப்பட்டுள்ளது. அந்த இடத்தைச் சுற்றிலும் அநேக புதிய குடியிருப்பு மனைகள் உருவாகி வருகின்றன.அந்த இடம் ரேனியஸ் ஐயரவர்களை நினைவுகூறும் சிறப்புமிக்க நகராக உள்ளது.

நல்லூரில் ரேனியஸ் ஐயரவர்களின் நினைவாக தேவாலயத்தை அடுத்து பல்நோக்கு மண்டபம் கட்டப்பட்டுள்ளது. கல்லிடைக்குறிச்சியில் 1828 இல் ரேனியஸ் ஐயரவர்களின் நற்செய்தி பணியால் திருச்சபை உருவானது அதை நினைவுகூறும் வகையில் 2019 ஆகஸ்டில் கல்லிடைகுறிச்சி தேவாலயத்தை ஒட்டி கட்டப்பட்டுள்ள பல்நோக்கு மண்டபத்திற்கு கனம் ரேனியஸ் பல்நோக்கு கூடாரம் என பெயரிடப்பட்டுள்ளது. பாளையங்கோட்டையில் கனம்.ரேனியஸ் ஐயரவர்கள் கல்லறை அமைந்துள்ள தெருவிற்கு ரேனியஸ் தெரு என பெயர் சூட்டப்பட்டுள்ளது.

**கால்டுவெல் காலனி**

C.M.S சபைகளுக்கான பேராயராக கனம் சார்ஜென்ட் ஐயர் அவர்களும் S.P.G சபைகளுக்கான பேராயராக கனம் கால்டுவெல் ஐயர் அவர்களும் சென்னை பேராயர் அவர்களின் தலைமையின் கீழ் திருநெல்வேலி திருமண்டலத்திற்கு என 11.03.1877 முதல் நியமிக்கப்பட்டார்கள். பேராயர் சார்ஜன்ட் அவர்கள் பாளையங்கோட்டையை தலைமையிடமாகக் கொண்டு பணி செய்ய ஆரம்பித்தார்கள். பேராயர் கால்டுவெல் அவர்கள் (07.05 1814 - 28.08.1891) இடையன்குடியில் 1841 முதல் 1877 வரை தங்கியிருந்தார்கள்.

S.P.G தலைமையகம் பேராயர் கால்டுவெல் தூத்துக்குடியை தலைமையிடமாகக் கொண்டு பேராயர் பணியை செய்வது சிறந்ததாக இருக்கும் என வேண்டுகோள் விடுத்ததன் அடிப்படையில் தலைமை இடத்தை தூத்துக்குடிக்கு மாற்றினார்கள். தூத்துக்குடியில் 1883 முதல் 1891 வரை 8 ஆண்டுகள் தங்கி இருந்தார்கள் தூத்துக்குடியில் உயர்நிலைப் பள்ளியும், கல்லூரியும் பேராயர். மகாகனம் கால்டுவெல் அவர்களால் கொண்டு வரப்பட்டது.

S.P.G மிஷனெரிகள் மார்காஷிஸ், ஷ்ராக், பேராயர் கால்டுவெல் ஆகியோரிடையே உயர்கல்வி குறித்த காரியத்தில் உயர்நிலைப்பள்ளி, கல்லூரி இரண்டும் தூத்துக்குடியில் அமைய வேண்டும் என்ற கால்டுவெல் அவர்களின் திட்டம் ஆகியவற்றில் கருத்து வேறுபாடு ஏற்பட்டது. நாசரேத் ஆண்கள் உயர்நிலைப்பள்ளி தரம் குறைக்கப்பட்டு நடுநிலைப்பள்ளியானது சாயர்புரத்தில் நடைபெற்ற கல்லூரி தூத்துக்குடிக்கு மாற்றப்பட்டது.

நாசரேத் கனம்.மார்காஷிஸ் சாயர்புரம் கனம்.ஷ்ராக் ஆகிய மிஷனெரிகளின் எதிர்ப்பு காரணமாக தூத்துக்குடியில் நடைபெற்று வந்த கல்லூரி திருச்சி பிஷப் ஹீபர் கல்லூரியுடன் இணைக்கப்பட்டது. கால்டுவெல் உயர்நிலைப்பள்ளி மட்டும் தூத்துக்குடியில் செயல்பட்டு வந்தது. அது இன்று மேல்நிலைப் பள்ளியாக தரம் உயர்த்தப்பட்டு சிறப்பாக இயங்குகிறது. ஏற்கனவே உடல் அளவில் பாதிக்கப்பட்டு இருந்த பேராயர் கால்டுவெல் அவர்கள் தூத்துக்குடியில் நடைபெற்ற கல்லூரி திருச்சிக்கு மாற்றப்பட்டதால் மனதளவில் பாதிக்கப்பட்டார். சில காலம் சென்ற பின்னர் உடல் நிலையை கருத்தில் கொண்டு பேராயர் பதவியை ராஜினாமா செய்துவிட்டு கோடை வாசஸ்தலமான கொடைக்கானல் சென்று குடியமர்ந்தார்.

கால்டுவெல் அவர்கள் தூத்துக்குடிக்கு என பள்ளி மற்றும் கல்லூரி அமைய எடுத்துக் கொண்ட சிறப்பு முயற்சிகளை நினைவுகூர்ந்த தூத்துக்குடி திருச்சபை மக்கள் அவரை நினைவு கூறும் வண்ணம் தூத்துக்குடியின் தென் பகுதியில் பெரியதோர் இடம் வாங்கி கால்டுவெல் மேல்நிலைப் பள்ளி ஆசிரியர்கள் மற்றும் பிற ஊழியர்கள் குடியேறிய புதிய குடியேற்ற நகரத்திற்கு கால்டுவெல் காலனி என பெயரிட்டு கால்டுவெல் அவர்களை நினைவுகூர்ந்து பெருமைப்படுத்தினார்கள். அந்த இடத்தில் சி.எஸ்.ஐ தேவாலயமும் கத்தோலிக்க தேவாலயமும் சிறப்பாக கட்டப்பட்டுள்ளது. பெருமளவில் கிறிஸ்தவர்கள் வாழும் நகராக அது விளங்குகிறது.

கால்டுவெல் நினைவாக கால்டுவெல் நூற்றாண்டு நினைவு மேல்நிலைப்பள்ளி அவர் நேசித்ததும் அவரது உடல் அடக்கம் செய்யப்பட்டதுமான இடையன்குடியில் நூற்றாண்டை கடந்து சிறப்பாக செயல்படுகிறது.

**மார்காஷிஸ் நகர்**

தென் தமிழகத்தில் கிறிஸ்தவர்கள் பெரும்பான்மையாக வசிக்கும் சிறப்புமிகு நகரம் நாசரேத். 1798-1799 ஆண்டுகளில் S.P.C.K மிஷன் சங்க கிறிஸ்தவ மிஷனெரிகளின் நற்செய்தி அறிவிப்பின் பயனாக சான்பத்தில் வசித்த 35 குடும்பங்களில் எட்டு குடும்பத்தினர் திருமுழுக்கு பெற்று கிறிஸ்தவராயினர். அவர்களைத் தொடர்ந்து 1800க்குள் அனைத்து குடும்பத்தினரும் கிறிஸ்தவராகி சான்பத்து கிராமம் கிறிஸ்தவ கிராமம் ஆனது. அதன்பின் இக்கிராமம் வடக்கு முதலூர், வாழையடி நாசரேத் என அழைக்கப்பட்டு பின்னர் 1803 முதல் நாசரேத் என பத்திர ஆவணங்கள் முதல் அனைத்திலும் இக்கிராமம் அழைக்கப்படுகிறது. முதலில் பனை ஓலையை மேற்கூரையாகக் கொண்ட தேவாலயம் அமைக்கப்பட்டது. இரண்டாம் தேவாலயம் மிகச் சிறப்பாக கட்டப்பட்டு 20.11.1830 இல் கனம் அடைக்கலம் ஐயரவர்களால் பிரதிஷ்டை செய்யப்பட்டது. அந்நேரம் இக்கிராமத்தின் தொடக்ககால கிறிஸ்தவ குடும்பத்தைச் சார்ந்தவரும் அக்கால பிரதான முக்கந்தராக இருந்தவருமான கருப்பன் முக்கந்தர் பத்திரம் வாசித்து தேவாலயத் திறப்புக்கடமையை



நிறைவேற்றினார்.

தற்போதுள்ள மூன்றாம் தேவாலயம் கனோன். கோயில்பிள்ளை ஐயரவர்களின் காலத்தில் சிறப்பாக கட்டப்பட்டது. 12.03.1928 இல் பேராயர்.மகாகனம் நார்மன் டப்ஸ் அவர்களால் பிரதிஷ்டை செய்யப்பட்டது அந்நேரம் பத்திரம் வாசித்து தேவாலயத் திறப்பு கடமையை கருப்பன் முக்கந்தரின் மகனாகிய சுவாமியடியான் உபதேசியாரின் கொள்ளுப்பேரனான அக்கால நாசரேத் சேகர கமிற்றி செயலாளரான திரு எம். எஸ். அப்பாதுரை அவர்கள் நிறைவேற்றினார்கள்.

நாசரேத் நகரத்தில் சிறப்பாக தமது மிஷனெரி பணியை செய்து நாசரேத்தில் பிற்காலத்தில் ரயில்பாதை வருவதற்கும் ஆழ்வார்திருநகரி, சாத்தான்குளம் பெரும்பாதை நாசரேத் வழியாக செல்வதற்கும் வழிவகை செய்தவரும் நாசரேத்தின் முன்னேற்றத்திற்கு அரும்பாடுபட்டவரும் நாசரேத்தின் தந்தை என புகழ்ந்து அழைக்கப்படும் மகோன்னத மிஷனெரி கனோன். மார்காஷிஸ் ஐயரவர்கள் (24.12.1852 - 27.04.1908) 1876 முதல் 1908 வரை நாசரேத்தில் செய்த சீரிய சேவையை நினைவுகூர்ந்து நாசரேத்தின் தென்பகுதியில் நாசரேத் - சாத்தான்குளம் பெரும் பாதையின் கிழக்குப் பகுதியில் ஜெயராஜ் அன்னபாக்கியம் C.S.I பாலிடெக்னிக் கல்லூரி மற்றும் ஜெயராஜ் அன்னபாக்கியம் C.S.I பொறியியல் கல்லூரி ஆகியவை அமைந்துள்ள இடத்திற்கு மார்காஷிஸ் நகர் எனப் பெயரிட்டு நாசரேத் ஊரார் சிறப்பித்துள்ளனர். நாசரேத்தில் உள்ள ஆண்கள் மேல்நிலைப்பள்ளி மற்றும் மெட்ரிக் மேல்நிலைப்பள்ளி ஆகியவை கனம் மார்காஷிஸ் ஐயரவர்களின் பெயரைத் தாங்கி நிற்கின்றன. இன்றளவும் அனைத்து காரியங்களிலும் நாசரேத் திருச்சபையார் மார்காஷிஸ் ஐயரவர்களை நன்றியோடு நினைவு கூர்ந்து வருகிறார்கள்.

மிஷனெரி ஊழியங்களுக்கு ஆதரவாக இருந்த ஆட்சியாளர்கள் வணிகர்கள் நினைவாகவும் நகரங்கள் காணப்படுகிறது. அவையாவன

1. சாயர்புரம் 2. டோனாவூர்
3. டூவிபுரம் 4. லெவிஞ்சிபுரம்

**J.ஜான் ஞானராஜ், கல்லிடைக்குறிச்சி**

---

# சீயோன் மலை

**பெயர் வரலாறு**

சுவிசேஷபுரத்தின் முதல் இந்திய குரு ஆபிரகாம் சாமுவேல் ஐயர் (1851-52, 57-60). அவர் சுவிசேஷ ஊழியத்தில் அதிக ஆர்வம் கொண்டவர். மற்றப்படி, சபையாட்சியிலோ, நிர்வாகத்திலோ, மேய்ப்புத் தொழிலிலோ சிறிதும் திறமை கொண்டவரல்ல. சுவிசேஷ ஊழியத்தின் பயனாக, மக்கள் கிறிஸ்து சபையில் சேர விருப்பம் தெரிவிக்கும் காலை அன்னாருக்கு எதிர்ப்பெதுவும் ஏற்படின், அவர்களுக்குத் தன்னாலாகக்கூடிய உதவிகளைச் செய்து உற்சாகப்படுத்த வேண்டியதிருக்க, அவர் அவ்வாறு செய்யவேண்டுமென்று கிஞ்சித்தும் சிந்தியாதிருந்து விடுவார். **“இந்திய குருமார் புதிதாய் எவரையும் கிறிஸ்துமார்க்கத்தில் சேர்க்காதிருந்துவிட்டாலும் பரவாயில்லை உள்ளவர்களை இழந்துவிடாமல் காத்துக்கொண்டால் அதுவே போதும்”**, என்று இவரை வைத்து, மெஞ்ஞானபுரம் பெரிய தோமாஸ் ஐயர் பொதுக் குறிப்பொன்று எழுதிவிட்டது. அந்நாளைய குருக்குழாத்துக்கு வருத்தம் தந்தது. பாவம், சாமுவேல் ஐயர்!. சாது மனிதர்!.

சுவிசேஷபுரத்தில் அவர் தனிப்பொறுப்பு வகிக்கும் குருவாகவல்லாது, பெரிய ஷாஃப்டர் ஐயர், சின்ன ஷாஃப்டர் ஐயர் என்ற இரு மிஷனெரிகளுக்கு உதவியாகவே பணியாற்றி வந்தார். சுவிசேஷ வேலை அவரது பொறுப்பு.

அவர் முதல் முதலாவதாகக் கண்வைத்தது, பன்றிமூலை யென்னும் கிராமம். பன்றிமலையென்று அதைக் குறிப்பிடுவர். 1851-ம் ஆண்டு தொடங்கி அவர் செய்தவூழியம் நாளாவட்டத்தில் பயன் தரவாரம்பித்தது. ஊரின் இருபகுதிகளிலும் சிலர் சபையில் சேர விரும்பினர். ஆனால் மிராசுதார் அதைப் பற்றிக் கேள்வியுற்றதும், அம்மக்களைக் கூப்பிட்டனுப்பி, அச்சுறுத்தி எச்சரித்தார். மறுவிசை சாமுவேல் ஐயர் அவ்வூருக்குச் சென்றபோது, அம்மனிதர் நடந்ததைக் கூறித், தாங்கள் கிறிஸ்துமார்க்கத்திற் சேர்வதற்கில்லை யென்று தெரிவித்ததும், ஐயர் ‘சரி’ என்று கூறித் திரும்பிவிட்டார். அதன்பின் பன்றிமூலை மறக்கப்பட்டுப்போயிற்று. வெகுநாட்களுக்குப்பின் பெரிய ஷாஃப்டர் ஐயர் ஒரு தடவை அவ்வூருக்குச் சென்றார் (1859). அவர் ஓராண்டு அங்குச் சுவிசேஷம் கூறிச், சில மக்களை மனந்திரும்பச் செய்தார். மறுபடியும் எதிர்ப்புக் கிளம்பிற்று. ஆயினும் அவர் அடிக்கடி தானே சென்றும், சாமுவேல் ஐயரையும், உபதேசிமாரையும் அனுப்பியும் அவர்களை உற்சாகப்படுத்தவே, அவர்கள் மிராசுதாரின் எதிர்ப்பைச் சமாளித்து உறுதியாக நிலைத்துவிட்டனர். ஷாஃப்டர் ஐயர் அவர்கள் உறுதியடைந்ததும், அவர்களை ஆயத்தக்காரராகச் சேர்த்து, அவ்வூரில் ஒரு சிறு ஆலயமும் கட்டிப் பிரதிஷ்டை செய்தார். பிரதிஷ்டை தினத்தன்று அவ்வூரின் பெயரான பன்றிமூலை அல்லது பன்றி மலை யென்பதை மாற்றிச் சீயோன் மலையென்று பெயர் வைத்தார் (1860).

**சுஜித்**



நூலில்

மெஞ்ஞானபுரம்

## தென் நெல்லை அப்போஸ்தலன்

# ஜாண் தாமஸ்

ஆக்கியோன்

**பேராசிரியர்.அருள்திரு.D.A. கிறிஸ்துதாஸ்**
**B.A.,L.T.,B.D.,M.Th.**

பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் அவர்கள் திருநெல்வேலி திருச்சபை வரலாறு மற்றும் திருச்சபையில் தடம் பதித்த மகத்தான தேவ மனிதர்கள் பற்றி ஏராளமான நூல்கள் எழுதி இருக்கிறார். இப்புத்தகங்கள் அவர்களைப் பற்றி அறிந்துகொள்ளச்செய்வதுடன், நாமும் திருச்சபைக்கு நம் பங்காக என்ன செய்ய முடியும் என்ற சவாலை முன்வைப்பதாக இருக்கின்றன. இவ்வரிசையில், ‘தென் நெல்லை அப்போஸ்தலன் ஜாண் தாமஸ்’ அவர்களது சேவையையும் நாம் நன்றியுடன் நினைவுபடுத்தி அவர்களை நம் மத்தியில் கொண்டு வந்து வல்லமையாக உபயோகப்படுத்தின ஆண்டவருக்கு துதியும் தோத்திரமும் செலுத்துவதாக அமைந்ததுள்ளது. இந்நூலை வாசிக்கிற திருப்பணிவிடையாளர் யாவரும் கனம் ஜாண் தாமஸ் ஐயரவர்களைப் போல நற்செய்திப் பணியில் ஆர்வமுடையவர்களாயும், பாடுகள், கொடும் தொற்றுநோய்ப் பரவலில் பெரும் இழப்புகள் மத்தியிலும், சபையாரைக் கிறிஸ்தவ விசுவாச வாழ்க்கையில் ஊன்றக் கட்டுகிறவர்களாயும் தங்களுக்காக வாழாது ஆண்டவருக்காகவே வாழவும் தூண்டப்படுவார்கள் என நம்புகிறேன். இந்நூல் இக்காலத்திற்கும் பொருத்தமானதாகவும் நம் முன் ஒரு சவாலையும் வைக்கிறது.





மறுபதிப்பு-2022

திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்

வெளியீடு

**மெஞ்ஞானபுரம் பொது மகமை சங்கம்**

ஒருங்கிணைந்த சேலம் பகுதிகளில்

# வெளிநாட்டு மிஷனெரிகள் உருவாக்கித் தந்த கிறிஸ்தவ குடியிருப்புகள்

சேலம் மாவட்டத்தில் வெளிநாட்டு மிஷனெரிகள் உருவாக்கித் தந்த கிறிஸ்தவ குடியிருப்புகள், கிராமங்கள் மற்றும் ஊர்கள் மலைமேல் இருக்கும் பட்டணங்கள் போல யாவரும் அறியத்தக்கதாகவும், அனைத்திலும் முன்னோடியாகவும், திகழ்கின்றன. பெரும்பாலான ஊர்கள் பொதுவான கிறிஸ்தவ பெயர்களிலும், சில ஊர்கள் மிஷனெரிமார்கள் மற்றும் பரோபகார பிரபுக்கள் பெயர்களிலும் இருக்கின்றன. இந்த குடியிருப்புகளின் தோற்றம், பின்புல வரலாறு, இன்றைய நிலை ஆகியவற்றை ஆராயும்போது சமத்துவம், அடிமைத்தனத்திலிருந்து விடுதலை, சுதந்திர சுகவாழ்வு இவற்றை நாடியதான மக்கள் பயணத்தில் அவர்களுக்கான மிஷனெரிமார்களின் பங்களிப்பே இந்த குடியிருப்புகள் என்று சொல்லலாம். சாதீய, மத துவேஷங்களால் தீங்கனுபவித்து, துரத்துண்ட கிறிஸ்தவர்களுக்கு இந்த குடியிருப்புகள் உண்மையில் பழைய ஏற்பாட்டில் சொல்லப்பட்ட அடைக்கல பட்டணங்களாகவே திகழ்ந்தன. சுயமரியாதையுடனும், சுதந்திரத்துடனும், ஒவ்வொரு கிறிஸ்தவரும் தங்கள் தங்கள் வீடுகளிலும், குடியிருப்புகளின் பொது இடங்களிலும் தங்களை சுட்டும் விரல்களால் மிரட்டுவாரும், விரட்டுவாரும், இன்றி சுகவாழ்வு வாழ்ந்து சுகித்திருந்தார்கள். இப்படிக் கொத்த குடியிருப்புகள் ஒன்றில் (சேலம், அஸ்தம்பட்டி, அடைக்கல நகர்) எங்கள் குடும்பம் தலைமுறைத் தலைமுறையாக தலை நிமிர்ந்து வாழ்ந்து வருவது ஒரு ஜீவிய சாட்சி.

சேலம் மாவட்டத்தைப் பொருத்தவரை முதலில் உருவான கிறிஸ்தவ குடியிருப்பு - சேலம் நகரத்தில் கோட்டைக்கும், செவ்வாய்பேட்டைக்கும், இடைப்பட்ட சேலம் மிஷன் வளாகத்தில் சங்கை ஜார்ஜ் வால்டன் ஐயர் (Rev. George Walton, L. M. S.) காலத்தில் கி.பி. 1834ல் உருவானதும், கி. பி. 1863ல் சேலம் கோட்டையில் ஸ்தாபிதம் கண்டதுமான சேலம் கோட்டை **'கிறிஸ்டியன் பேட்டை'**; இதனைத் தொடர்ந்து, சேலம் அஸ்தம்பட்டியில் திருநெல்வேலி சீமையிலிருந்து வந்த சங்கை ரேனியஸ் ஐயரால் உருவாக்கப்பட்ட கிறிஸ்தவ தொழிலாளர்களால் கி.பி. 1861ல் அமைத்துக் கொள்ளப்பட்ட, ரேனியஸ் ஐயர் அடக்க ஸ்தலம் உள்ள பாளை அடைக்கலாபுரம் நினைவாக பெயரிடப்பட்ட எங்கள் அடைக்கல நகர். அஸ்தம்பட்டி கிராமத்தில் அடைக்கல நகர் கிறிஸ்தவ குடியிருப்பு உருவான காலகட்டங்களுக்கும் முன்பதாகவே சேலம் மிஷன் இயக்கங்களின் தந்தை எனவும், இந்திய தொழிற்கல்வியின் தந்தை எனவும் அழைக்கப்படும், சங்கை ஜான் மைக்கேல் லெக்லர் ஐயர் (Rev. John Michael Lechler, L. M. S. ) அவர்களால் சேலம் மாவட்டம் ஆத்தூர் பகுதியில் மூன்று கிறிஸ்தவ கிராமங்கள்- குடியிருப்புகள் (Christian Settlements) உருவாக்கப்பட்டன; அவையாவன;

முதலில் உருவாக்கப்பட்டதினால் **'முதலூர்'** (First Village) இது ஆத்தூர் வட்டத்தில் மணிவிழுந்தான் என்ற ஊருக்கு அருகில் இருந்தது, அடுத்தது 'அருளூர்' ( Village of Grace) இது ஆத்தூர் வட்டத்தில் கெங்கவல்லி என்ற ஊருக்கு அருகில் இருந்தது, மூன்றாவதான 'சமாதானபுரம்' ( Village of Peace) இது செந்தாரப்பட்டி என்ற ஊருக்கு அருகாமையில் இருந்தது. ஆனால் இந்த குடியிருப்புகள் எல்லாம் சங்கை லெக்லர் ஐயர் காலத்திற்கு பிறகு சிதறிப்போன நிலையில் பின்பான ஐம்பதாண்டுகள் காலட்டத்தில் அந்த குடியிருப்புகள் இல்லை என்றானது.

### சேலம் சுக்கம்பட்டி எலிசபெத் பேட்டை

சேலம் - அரூர் நெடுஞ்சாலையில் சுக்கம்பட்டி என்ற கிராமத்திற்கு அருகில் உள்ள கிறிஸ்தவ குடியிருப்பு கிராம திருச்சபைதான் 'எலிசபெத் பேட்டை' ( Elizabeth pettai ).

சேலம் பகுதிகளில் அப்பொழுது குற்றச் செயல்களில் ஈடுபடும்படியாக தள்ளப்பட்ட இனத்தைச் சேர்ந்தவர்கள், குற்றப்பரம்பரை (Criminal Tribes) என முத்திரை குத்தப்பட்டு போலீஸ் அடக்குமுறைகளில் துன்புற்றனர். இவர்களின் துயர்துடைத்து இவர்களுக்கு மறுவாழ்வு அளிக்க முன்வந்தார். அன்றைய சேலம்



லண்டன் மிஷன் சங்க நிர்வாகி சங்கை வில்லியம் இராபின்சன் (Rev. William Robinson, L. M. S. )அவர்கள். ஆங்கில அரசாங்கமும் இந்த இன மக்களுக்கு சேலம் பகுதிகளில் சுக்கம்பட்டி மற்றும் முத்தம்பட்டி ஆகிய இடங்களில் நிலங்களை வழங்கி மறுவாழ்வு தந்தது. இதனை முன்னின்று இவர்களுக்கு சாதித்து தந்தவர் சங்கை வில்லியம் இராபின்சன் ஐயர். சுக்கம்பட்டி பகுதியில் இப்படி உருவாக்கப்பட்ட கிறிஸ்தவ குடியிருப்பிற்கு சங்கை இராபின்சன் ஐயர் தனது காலஞ்சென்ற மனைவி திருமதி. எலிசபெத் நினைவாக "எலிசபெத் பேட்டை" என பெயரிட்டார். அது இந்நாள்வரை நிலைத்திருக்கிறது.

லிசி (Lizzie)அம்மாள் என்று எல்லோராலும் அன்புடன் அழைக்கப்பட்ட திருமதி. எலிசபெத் இராபின்சன் அம்மாள் சேலத்தில் கி.பி. 1896 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 20 ஆம் நாள் கர்த்தருக்குள் நித்திரை அடைந்தார். அவரது பூதவுடல் சேலம் 4 ரோடு பெரமனூர் சீர்திருத்த கல்லறைத் தோட்டத்தில் உயிர்த்தெழுதலின் நம்பிக்கைக்கென்று நல்லடக்கம் செய்யப்பட்டது. இன்றும் அவரது கல்லறை பாதுகாப்பாக உள்ளது. இதனை வரலாற்றின் சாட்சிக்காக என்றும் நிலைத்திருக்கும்படி பழுதுபார்த்து நிலை நிறுத்த உத்தேசித்துள்ளோம்.

**இராபின்சன் பேட்டை - ஏற்காடு சேலம்:**

சங்கை வில்லியம் இராபின்சன் ஐயர் சேலம் ஏற்காட்டில் பஸ் நிலையத்திற்கு சற்று தொலைவில் உள்ள லாங்லீ பேட்டை (Longley pettai - சேலத்தில் கலெக்டராக இருந்த ஆங்கிலேயர் திரு. C. T. Longley - பதவிக் காலம் -1870-1881 - தனது நிலத்தை ஏழைகளின் குடியிருப்பிற்காக தந்துவிட்டார். அதனால் இந்த இடம் இன்றும் லாங்லீ பேட்டை என அழைக்கப்படுகிறது.) என்ற இடத்திற்கும் லுத்தர் பேட்டை (Luther pettai-அன்று லுத்தரன் மிஷன் கிறிஸ்தவர்கள் வசித்துவந்த இடம் இது இன்றும் லுத்தர் பேட்டை என்றே அழைக்கப்பட்டுவருகிறது) என்ற இடத்திற்கும் இடைப்பட்ட தனக்கு சொந்தமான நிலப்பகுதியில் ஏற்காட்டில் வாழும் வீடற்ற கிறிஸ்தவர்கள் வீடுகட்டிக்கொள்ள அனுமதி அளித்தார். அந்த இடம் "இராபின்சன் பேட்டை" என்று அழைக்கப்பட்டது. ('During his time a plot of ground was secured by him for the use of poor christians at yercaud, who suffered for want of houses and they were permitted to build houses of their own which is called "Robinson Pettai". - page no. 19, My Experiences in the L. M. S., Salem - S. J. Simpson, 1921. )




**டேனீஸ்பேட்டை ஓமலூர் சேலம் :**

சேலம் ஏற்காட்டின் மேற்கு சரிவின் கீழாக காடையாம்பட்டி என்ற இடத்தில் மலைவாழ் மக்கள் மத்தியில் ஊழியம் செய்யும்படி வந்த டேனீஸ் மிஷனெரிகள் தங்களுக்கான மிஷன் பணித்தளத்தை அங்கே ஸ்தாபித்தனர். அந்த பகுதி சேலத்திலிருந்து சென்னை செல்லும் இருப்புப்பாதை மார்க்கத்தின் காடையாம்பட்டி இரயில் நிலையம் அருகில் இருந்தது. நாளடைவில் அந்த இரயில் நிலையம் அருகில் சிறந்து விளங்கிய டேனீஸ் மிஷன் குடியிருப்புகளால் 'டேனீஸ்பேட்டை இரயில் நிலையம்' என்று அது பெயர் பெற்றது. இதற்கு ஒரு கதையும் சொல்லப்படுகிறது. அதாவது ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் மோசமான நிலையில் கொசுக் கடிகளுக்கும் மலேரியா காய்ச்சல்களுக்கும் பேர்போன இந்த காடையாம்பட்டி இரயில் நிலையத்தில் பணிசெய்ய யாரும் முன்வராத நிலை இருந்ததாம்; அதனை மாற்ற இரயில் நிலையத்தின் பெயரை மாற்றி அதன் காட்சியை மேம்படுத்த எடுத்த நடவடிக்கையே இந்த பெயர் மாற்றம் என்பதே அது. இரயில் நிலையத்தை சூழ டேனீஸ் பேட்டை என்ற ஊரும் உருவாகி சிறப்பு பெற்றது.

சங்கை மார்ட்டன் ஆன்டர்சன் ஐயர் (Rev. Morten Andersen -1890-1931) கி.பி. 1903 ஆம் ஆண்டு இங்கு ஒரு ஆலயத்தைக் கட்டினார். பின்னர் 1919ல் புதிய ஆலயம், இது 'ஆன்டர்சன் நினைவு ஆலயம்' என பெயர் பெற்றது. இந்த ஆலயமும் பணித்தளமும் 1947ல் தென்னிந்திய திருச்சபைக்கு ஒப்படைக்கப்பட்டது. இன்று இந்த ஆலயம் CSI ஆன்டர்சன் நினைவாலயம், டேனீஸ் பேட்டை, என அழைக்கப்படுகிறது.

கிறிஸ்துவின் நற்செய்தியை நமக்கு அறிவிக்க வந்த வெளிநாட்டு திருத்தொண்டர்களான அந்த மிஷனெரிமார்கள் சத்தியத்தை போதித்ததோடல்லாமல், நாம் சுதந்திரமாக, அச்சுறுத்துவார் இன்றி, சுகவாழ்வு வாழ, நமக்கான நம் வாழ்வில், நாம் தலை நிமிர்ந்து சுயமரியாதையுடன் நடக்க, தொல்லைகள் அல்லல்கள், இன்றி சுக வாசஸ்தலங்கள் அமைத்துத்தந்த அந்த வள்ளல்களை நினைவில் வைத்து, அவர்கள் செய்தளித்த இந்த இருக்க இடமான தர்மம் அழிவுபடாமல் எந்நாளும் பாதுகாப்போம். பெயர்மாற்றங்கள் என்ற பேராபத்து அவர்கள் செய்த இந்த தர்மத்தை தன்னலமற்ற சேவைகளை நன்றி மறந்தார் போல - நன்றி கொன்றார் போல நம்மை ஆக்கிவிடும்.

'எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் ;
உய்வில்லை செய்நன்றி கொன்ற மகற்கு.' திருக்குறள் 110.

**ஜே. பர்னபாஸ் ,சேலம் வரலாற்றுச் சங்கம்,**




# டோனா பிரபுவால் உருவான டோனாவூர்

திருநெல்வேலி மாவட்டம் நாங்குநேரி தாலுகாவில் உள்ள கிறித்தவ வரலாற்றுச் சிறப்புமிக்க ஊர் டோனாவூர் என்பதாகும். இவ்வூர் ஜெர்மன் நாட்டு கிறித்தவ மிஷனெரியான சார்லஸ் தியாப்பிலஸ் ஈவால்ட் ரேனியஸ் (1790- 1838) என்பவரால் உருவாக்கப்பட்டது. இவர் 1814 ஆம் ஆண்டு இந்தியாவிற்குள் கிறித்தவ சமயப் பணிக்கென்று வந்து, சென்னையைச் சுற்றியுள்ள பகுதிகளில் ஐந்து ஆண்டுகள் சமயப்பணிகளோடு சமூகப்பணிகளும் செய்தார். அதன் பின்னர் 1820 ஆம் ஆண்டு திருநெல்வேலி மாவட்டத்திற்குப் பணிமாற்றம் செய்யப்பட்டு பாளையங்கோட்டையை வந்தடைந்தார்.

திருநெல்வேலி மாவட்டம் முழுவதிலுமுள்ள கிராமங்களில் கால்நடையாகவும் குதிரைகளிலும் சென்று சமயப்பணியைச் செய்திருக்கிறார். அவ்வாறே 1826 ஆம் ஆண்டு புலியூர்குறிச்சி என்ற ஊரிலும் சமயப்பணியைச் செய்தார். இதன் விளைவாக, அங்குள்ள நாடார் சமூகத்தினரில் ஒருசிலர் அவரது கருத்துக்களுக்குச் செவிமடுத்து கிறித்தவத்தை ஏற்க முன்வந்தனர்.

அக்காலகட்டத்தில் உயர்சாதியினராகத் தங்களைக் கருதிக் கொண்ட ஆதிக்கவாதிகளுக்கு அடிமைகளாகவே அங்கு வாழ்ந்து வந்த மற்ற சாதியினர் இருந்து வந்திருக்கின்றனர். இந்நிலையில் ரேனியசின் சமத்துவத்தை முன்னிருத்தி அளிக்கப்பட்ட கிறித்தவச் சமயக்கோட்பாடுகள் அப்பகுதி மக்களை அவர்பால் ஈர்த்தன. இதனை விரும்பாத ஆதிக்கசாதியினரால் கிருத்தவத்தை ஏற்ற மக்கள் பெரும் தொல்லைக்குட்பட்டனர். அப்புதிய கிறித்தவர்களது வீடுகள் தீக்கிரையாக்கப்பட்டன; கொள்ளையடிக்கப்பட்டன. இதனையறிந்த ரேனியஸ், புலியூர்குறிச்சியில் நாடார் இனமக்கள் வாழ்ந்த வடக்குப் பகுதிக்கு அருகிலிருந்த 12 ஏக்கர் நிலப்பகுதியை விலைக்கு வாங்கினார்.

அந்த நிலத்தை வாங்க அவரது நண்பரான ஜெர்மனி நாட்டின் மாநிலங்களில் ஒன்றாக விளங்கிய ப்ரஷ்யாவைச் சார்ந்த ஷ்லோடின் என்ற பகுதியின் ஆளுநரும் உரிமையாளருமான கௌன்ட் டோனா என்பவர் அவருக்குப் பணம் அனுப்பினார். அந்தப் பணத்தில் வாங்கப்பட்ட அப்பகுதியை, டோனா பிரபுவின் பெயரால் அக்குடியேற்றத்திற்கு டோனாவூர் என்றே பெயரிட்டார், ரேனியஸ் ( Rhenius Jr.(ed), Memoir of Rev C.T.E Rhenius).

1827 ஆம் ஆண்டு மே 23 ஆம் தேதி அவ்வூர் ஏற்படுத்தப்பட்டது. அதில் முதலாவது ஏழு குடும்பங்கள் குடியேற்றுவிக்கப்பட்டன. இது போன்ற 30 ஊர்களை அன்றைய திருநெல்வேலி மாவட்டம் முழுவதும் ரேனியஸ் ஏற்படுத்தியிருக்கிறார். இவ்வாறு ஊர்கள் ஏற்படுத்தப்படுவதை குறித்து விவிலியத்தில், 'திட்டமிடாத தற்செயலாகக் கொலை செய்தவனை ஏற்று அடைக்கலம் அளிக்க நியமிக்கப்பட்ட இடங்கள் தப்பியோடுபவர்களுக்கு, நிபந்தனையற்ற பாதுகாப்பு அளிக்க நியமிக்கப்பட்டிருந்தன. குற்றமற்றவர்களும், குற்றவாளிகளும், தப்பியோடும் அடிமைகள், கடன்பட்டவர்கள்,அரசியல் அகதிகள் இப்படிப்பட்ட இடங்களை அடைந்து அந்த இடத்தில் கடவுளின் பாதுகாப்பைக் கோரினால், அவர்கள் பழிவாங்கப்படுவதிலிருந்தும், நீதித் தீர்ப்பிலிருந்தும் தப்பினர்' (I.விவிலியக்களஞ்சியம், ப - 77). என்று விவிலியக் களஞ்சியம் இத்தகைய ஊர்களை அடைக்கலப் பட்டணங்கள் என்று விளக்கமளிக்கிறது.

விவிலியத்தில் மோசேயின் நியாயப்பிரமாணத்திலும் அடைக்கலப்பட்டணங்கள் ஏற்படுத்தப்பட வேண்டும் என்று குறிப்பிடுகிறார். இதன் அடிப்படையில் தான் அன்றைய கிறித்தவ மிஷனெரிகள் தாங்கள் பணியாற்றியப் பகுதிகளில் கிறித்தவத்தை ஏற்றதால் மக்கள் அடைந்த துன்பங்களிலிருந்து அவர்களைத் தப்புவிக்க இத்தகைய ஊர்களை ஏற்படுத்தியிருக்கின்றனர். இத்தகைய ஊர்கள் ஐரோப்பியர்களான மிஷனெரிகளின் நேரடி பாதுகாப்பில் இருந்தமையால் சமூகத் தீங்கிழைப்போர்களிடமிருந்து தப்பித்துப் பாதுகாப்புடன் வளர்ச்சியடைந்தன.

டோனாவூர் உருவாக்கப்பட்ட அன்றே ஊரின் வடக்குப் பகுதியில் பனையோலைகளால் கூரை வேயப்பட்ட சிறிய ஓர் ஆலயமும் கட்டபட்டது. அதில் ஓராண்டிற்குள் ஊரில் மக்கள் அதிக அளவில் குடியேறி சபை நிரம்பி வழிந்தது. எனவே ரேனியஸ் அவ்வாலயத்தை 1828 ஆம் ஆண்டு பெரிதாக்கி கட்டத் தொடங்கி 1829 ல் கட்டி முடித்தார். 1829 ஆம் ஆண்டு திருநெல்வேலி மாவட்டம் முழுவதுமுள்ள சபைகளை மூன்று சேகரங்களுக்குள்ளாக்கி நிர்வகிக்க பிரிக்கப்பட்டன. அவை, பாளையங்கோட்டை, சாத்தான்குளம், டோனாவூர் என்று மூன்று வட்டாரங்களாகப் பிரிக்கப்பட்டன. சாத்தான்குளம் வட்டாரத்தை ஷ்மிட் ஐயரும், டோனாவூரை வின்க்ளர் ஐயரும், பாளையங்கோட்டையை ரேனியஸ் ஐயரும் பொறுப்பேற்று நடத்தினர்.

அவ்வாண்டு டோனாவூர் சேகரத்தைச் சேர்ந்த சபைகள் 44. அவற்றில் 1060 உறுப்பினர்களை உடைய 310 குடும்பங்கள் இருந்தன. தேவாலயங்கள் 5, சிற்றாலயங்கள் 10, பள்ளிக்கூடங்கள் 77, உபதேசிமார் 10 இருந்தன.( டி கிறிஸ்துதாஸ், அருள் தொண்டர் ரேனியஸ், ப- 181) இவ்வாறு ஊர் உருவாகி மூன்றே ஆண்டில் தனி சேகரமாக உருவாகிய டோனவூர் சேகரம் இன்று பல்வேறு சேகரங்களாகப் பிரிந்து, தாய் சேகரமான டோனாவூரைச் சூழ்ந்து ஒலிவமரக் கன்றுகளாய் செழித்து நிற்பதைக் காணமுடிகிறது.

டோனாவூர் உருவாக பணம் அனுப்பி உதவிய டோனா பிரபு இன்றும் வாழ்கிறார், தான் உருவாக்கி தனது நண்பனின் பெயரைச் சூட்டிய ரேனியசின் தன்னலமற்ற சேவையினால்..!!

**ஜான்சி பால்ராஜ், வரலாற்று ஆய்வாளர்.**

# வரலாற்றுச் செய்தி

**புகழ்மிகு நிலத்தின்** (பதினான்காவது ) 14 வது பேராயர் அருள்திரு ARTGS பர்னபாஸ் ஐயா அவர்களுக்குப் வாழ்த்துக்கள்

உலகில் கிறித்தவ நற்செய்திப் பணியினை ஆற்றிவரும் பல இடங்களில் முக்கிய இடத்தைப் பெற்றுள்ளது திருநெல்வேலி, ஏனெனில் நற்செய்தியாகிய விதையினை விதைப்பதற்கும், அப்பணியினை ஆற்றி வரும் பணியாளர்கள் நற்பயனைப் பெறுவதற்கும் ஏற்ற இடமாக அது உள்ளது. 1857 ஆம் ஆண்டில் இதைக் குறித்து ஆராய்ந்து பார்த்த டாக்டர் கால்டுவெல் மிக்க மகிழ்ச்சியுடன் இந்தியாவின் மிகப் பெரிதும் "வளம் பெற்றதும். முன்னேறக் கூடியதுமான கிறித்தவ சமுதாயத்தை இங்கு கண்டதால் இதயமும் கண்களும் மகிழ்வெய்தின" எனக் குறிப்பிட்டுள்ளார். 1821 இல் பேராயர் ஹிபர் - 'தஞ்சை நெல்லை கிறித்தவ ஸ்தாபனங்களே இந்தியாவில் கிறிஸ்தவத்திற்கும் பலமும் தூண்டுகோலுமாக விளங்கின' - எனக் கூறியுள்ளார். 20 ஆண்டுகளுக்குப் பின் நெல்லைக்கு வருகை தந்த பேராயர் ஸ்பென்சர், திருநெல்வேலியின் வளமார்ந்த, ஏற்றம் மிக்க நிலையினை எழுதியதோடு 'இங்கிலாந்து இயேசு கிறிஸ்துவின் நற்செய்திக்கு எவ்வளவு முக்கியத்துவத்தை கொடுக்கின்றதோ, அவ்வளவு முக்கியத்துவத்தை நெல்லையும் கொடுக்கிறது' என்று துணிந்து ஆணித்தரமாகக் கூறியுள்ளார்.

தேவ ஊழியர் பலரால் சொல் மாலை சூட்டப்பெற்றபடி நெல்லை திருச்சபை வளர்ச்சியானது கிறித்தவத்தைத் தழுவிய நாடுகள் எங்கும் பரவியது. நற்செய்திப் பணியாளர்களின் முயற்சியினை ஏற்றுக் கொள்ளக் கூடியதாக நெல்லை நிலம் இருந்ததால், அவ்வூழியத்திற் கெனத் தம்மைத் தத்தம் செய்துள்ள தேவ ஊழியர்கள் முறையாக வருகை தந்து நற்செய்தியாகிய விதையினை விதைத்து புதிதாகத் தொடங்கிய சபையினைப் பராமரித்ததோடு, அவ்வப்பகுதியில் உள்ள மூப்பர்களைச் சீராகப் பயிற்றுவித்து, முழுப் பொறுப்பையும் ஏற்று நடத்தும் வண்ணம் அவர்களைத் தேர்ச்சி அடையச் செய்தனர். எல்லாவற்றுக்கும் மேலாக கடவுளின் அளவற்ற அருளால் இச்சபை, திருமண்டிலமாக மலர்ந்து 125 ஆண்டுகள் ஆயின மிக எளிமையான, அற்பமான திருச்சபையின் ஆரம்பத்தைக் கொண்ட தென்னிந்தியத் திருச்சபையின் அங்கமான திருநெல்வேலித் திருமண்டிலம். தற்போது பதினான்காவது பேராயர் அவர்களை பெற்றுள்ளது.

புதிய பேராயர் ARTGS பர்னபாஸ் அவர்களை திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கத்தின் சார்பாக அன்போடு கூட வாழ்த்துகின்றோம்.





Rt. Rev. ARGST.Barnabas

## BISHOPS OF TINNEVELLY

Rt. Rev. Middleton, Thomas Fanshawe 1815-1822
Rt. Rev. Heber, Reginald 1823-1826
Rt. Rev. James, John Thomas 1825-1828
Rt. Rev. Turner John Matthias 1829-1831
Rt. Rev. Wilson, Daniel 1832-1835
Rt. Rev. Corrie, Daniel 1835-1837
Rt. Rev. Spencer, George John Trevor 1837-1848
Rt. Rev. Dealtry, Thomas 1849-1861
Rt. Rev. Gell, Frederick 1861-1899

## SPG & CMS

Rt. Rev. Caldwell, Robert 1877-1891

Rt. Rev. Sargent, Edward 1877-1889

## REGULAR BISHOPS OF TINNEVELLY

Rt. Rev. Samuel Morley 1896-1903
Rt. Rev. Arthur A Williams 1905-1914
Rt. Rev. Harry M Waller 1915-1923
Rt. Rev. Norman H Tubbs 1923-1928
Rt. Rev. Frederick J Western 1929-1938
Rt. Rev. Stephen C Neill 1939-1944
Rt. Rev. George T Selwyn 1945-1952
Rt. Rev. Augustine G Jebaraj 1953-1970
Rt. Rev. Thomas S Garrett 1971-1974
Rt. Rev. S Daniel Abraham 1975-1984
Rt. Rev. Jason S Dharmaraj 1985-1999
Rt. Rev. S Jeyapaul David 1999 -2009
Rt. Rev. J J Christdoss 2009-2020
Rt. Rev. ARGST.Barnabas 2021-

தமிழ் நாட்டின் தனிப்பெரும் நாவலாசிரியர்

அ மாதவையா அவர்களின்

# கிளாரிந்தா

தமிழ்நாட்டில் வெளி வந்த முதல் வரலாற்று நாவல்

தொடர் – 9

சந்நியாசிக்கு அமாத்யாவை அறவே பிடிக்காவிட்டாலும், அவர் மகன் நல்லவன் என்று தோன்றியது. அதனால் தான் அவனை வரனாகத் தேர்ந்தெடுத்திருந்தார். தமது மகன் முராரி விஷயத்தில் சோதிடம் அவருக்குத் துரோகம் இழைத்திருந்தது. அந்தப் பெருந்துன்பத்துக்குப் பின்னும்கூட சோதிடத்தில் அவர் நம்பிக்கை அசையாமல் இருந்தது. தமது அரைகுறை ஞானத்தினால், தான் முன்பு தவறு செய்திருக்கக்கூடும் என்று கருதியே இப்பொழுது திவானைக் கலந்தாலோசித்தார். உல்லாசமான வல்லத்து வீட்டைவிட்டு இரைச்சல் மிகுந்த நகரத்தில் வசிக்கத் தொடங்கியதிலிருந்தே அவருக்கு இதயத்தில் அடிக்கடி கடும் வலியும், காரணமில்லாத சோர்வும், மயக்கமும் வந்து கொண்டிருந்தன. அவர் இதை யாரிடமும் சொல்லவில்லை. ஆனால் தம் நாட்கள் குறுகிவிட்டன என்பதை உணர்ந்தார். காசியில் மரிக்கும் ஆசையையும் விட்டுவிட்டார். இறப்பதற்கு முன் தன் கண்மணி பாயியை தகுந்த இடத்தில் மணம் செய்விப்பது தான் அவருக்குப் பெருங்கவலையாக இருந்தது. திவான் நல்ல சம்பந்தம் தான். ஆனால் வயது பெரும் முட்டுக் கட்டையாய் இருந்தது. அதனால் தான் அவர் அவரை ஒருவனாக இதுவரை நினைக்கவேயில்லை. ஆனால் இப்பொழுது வேறு வழியில்லாததால் நாற்பத்தைந்து அப்படி ஒரு வயதா என்று தோன்றிற்று. ஐம்பதும் அறுபதும் ஆன ஆண்கள் தன் பேத்தியையும்விட வயதில் குறைந்த சிறுமிகளை மணந்ததை அவர் கண்டிருக்கிறார். ஆனால் பாயி நல்ல அழகி. துக்கத்தால் நொந்து போயிருந்த முதுமைக் காலத்தில் அவர் வாழ்க்கையில் ஒளியைச் சிந்தியவள். தான் அன்பு புரியும் ஒரே ஆத்மா கலை மகளே அவதார மெடுத்துவிட்டாளோ என்று தோன்றும் அறிவழகி, ஒன்றும் அறியாத இளம்பாலகி. அவளைக் கொண்டுபோய் கொள்கைகளும் நய உணர்ச்சிகளும் மரத்துவிட்ட லௌகிகனுக்குக் கொடுப்பதா? (நாற்பத்தி ஐந்து என்று அவரே சொல்கிறார். அதற்கு அதிகமாகவே முழிக்கிறார்!) அதுவே அவரை நடுங்கவைக்கப் போதுமானதாக இருந்தது. திவானையும் அவருடைய மைத்துனியையும் (காலமான அவர் மனைவியின் விதவைத் தங்கை) சேர்த்து வம்புப் பேச்சு அடிபடுவது அவர் காதிலும் விழுந்திருந்தது. தன் கண்மணி பாயியிடம் இந்தப் பேச்சை எடுப்பதே கொடுமை அல்லவா? பாயி புத்தி பலமும் பகுத்தறிவும் வாய்ந்தவள் மாத்திரமல்ல; அன்புக்கு ஏங்கும் மெல்லிய இயல்பு கொண்டவள். அவரிடமிருந்துகூட கடுமையான சொல்லையோ பார்வையையோ அவளால் தாங்கமுடியாது. கவிதை படித்து வந்ததால் தாம்பத்திய அன்பையும் இன்பத்தையும் பற்றி அவள் பிஞ்சு உள்ளத்தில் காதல் கற்பனைகள் சிறகடித் துக்கொண்டிருந்தன. இந்தப்பாவி திவான் அவளிடம் அப்படிப்பட்ட தூய அன்பு காண்பிப்பானா? இவள் அவனிடம் அன்பு கொள்ளும்படி அவனால் நடந்து கொள்ள முடியுமா? தெரிந்தும், இந்த மென்மையும் தூய்மையுமான அழகிய மலரை அவனுடைய அருவருப்பான கைகளில் வைக்கலாமா? மனைவி இறந்த பின் இந்த முப்பது ஆண்டுகளில் சந்நியாசி ஒரு பெண்ணையும் காமத்தோடு பார்த்ததுகூட கிடையாது. அத்தனைக் கட்டுப்பாட்டுடன் இருந்துவந்த முதிய துறவிக்கு இந்தச் செயல் அருவருப்பாகத் தோன்றிற்று. ஆனால் இப்பொழுதோ விதியே அவருக்கு எதிராகச் சதி செய்வது போலிருக்கிறது.

மனம் பேதலித்து வாழ்வில் முதல்முறையாக இன்ன முடிவுக்கு வருவதென்று தெரியாமல் திகைத்தார். ஆனால் திவானுக்குச் சாதகமாகவும் பல குறிப்புகள் அவர் மனத்தில் ஒன்றன்பின் ஒன்றாக நடைபோட்டன. திவானின் ஒரே மகள் நோயாளி, குழந்தையில்லாதவள். ஆகவே, இந்தத் திருமணத்தின் மூலம் பாயிக்குக் குழந்தை பிறந்தால், குழந்தை தன்னுடைய சொத்துக்களையும், திவானின் சொத்துக்களையும் ஒருங்கே அடையும். நாட்டில் பலமிகுந்து நிற்கும். யுத்தமும் படையெடுப்பும் பயமுறுத்தும் இந்த நாளில் அழகிய இளம் பெண்களுக்குத் தகுந்த பாதுகாப்புத் தேவை. திவானைவிட வேறு யார் சிறந்த பாதுகாப்பு அளித்துவிட முடியும்? தம்பி அமாத்யாவைப் போன்று அவர் அத்தனை போக்கிரி அல்ல. பாயியின் மகிழ்ச்சிக்காகத் தான் எது செய்யவும் சித்தமாக இருப்பதாகச் சொன்னபோது மனிதன் உண்மையையே சொல்லியிருக்கலாம். வயது நாற்பத்தைந்து தானாகிறது. அவர் போக்கில் அவர் பெண்ணை உண்மையாகவே நேசிக்கிறதாகத் தோன்றுகிறது. கடைசியாக, மகாராஜாவின் தயவு அவருக்கு வேண்டிய அளவு இருக்கிறது. அநேகமாக அடுத்த பிரதானர் அவர் தான் என்றே கருத்து நிலவுகிறது. இப்படியாக இரவு முழுவதும் பலபல எண்ணங்கள் ஒட்டியும் வெட்டியும் அவர் மனதில் அலைபாய்ந்தன. சந்நியாசி இப்பொழுது முன்னைப்போல் இரும்புச் சித்தம் கொண்டவராக இல்லை. இப்பொழுது தாராளமாக மனம்விட்டுப் பேசும் இயல்பை அடைந்திருந்தார். பேத்தி பாயி பற்றிய நினைவு, முதுமை, துக்கம் இவையெல்லாம் அவர் இயல்பில் விவரிக்க முடியாத ஒரு மென்மையை ஏற்றியிருந்தன. பழைய கடுமையும், திட சித்தமும் இப்பொழுது அடங்கியிருந்தன.

மான்தோல் படுக்கையில் அவர் உடல் புரண்டு கொண்டிருந்தது. மனமோ, கொந்தளிக்கும் கடலில் அவதியுறும் கட்டை போன்று நூற்றுக்கணக்கான கவலைகளிலும் பயங்களிலும் கனவுகளிலும் மோதிக்கொண்டிருந்தது. ஆனால் ஒரு விஷயத்தில் மாத்திரம் அவர் மனம் மிகத் தெளிவாக இருந்தது. பாயியைக் கலந்து கொள்ளாமல் அவர் திவானுக்குச் சாதகமாக முடிவு செய்வதில்லை என்று தீர்மானித்தார். பாயி. சுயமாகவும், துணிவாகவும் சிந்திக்கும் திறம் வாய்ந்தவள் என்பதை அவர் அறிவார். அவளுக்குச் சோதிடத்தில் பற்றுக் கிடையாது. ஏதாவது நம்பிக்கை இருந்தால் அது, அவள் அவர்மீது கொண்ட பக்தியினாலும் அவருடைய ஞானத்தைப் பற்றி மிக உயர்வாக எண்ணியதாலுமேயாகும். இப்படியும் ஒரு சாத்திரம் இருக்கமுடியுமா என்று காரண ரீதியாகச் சிந்தித்துக் கருத்து வெளியிட்டிருக்கிறாள். தன்னுடைய நம்பிக்கைகளும் கருத்துகளும் எவ்விதமாக இருந்தாலும் சரி, காடு வா என்று அழைக்கும் இந்த நேரத்தில் அவளைக் கலந்துகொள்ளாமல் அவளுடைய விதியை நிர்ணயிக்க தமக்கு எவ்வித உரிமையுமில்லை என்பதை அவர் உணர்ந்தார். முடிவும், பொறுப்பும் தன்னுடையதாக இருந்த போதிலும் அவளைப் பாதிக்கும் இந்த விஷயத்தைப்பற்றி முதலில் அவளிடம் கேட்டுவிடுவது என்று தீர்மானித்தார்.

### விடுவிக்க வந்தவர்

முதலில் செய்தியைச் சொன்னவனுக்கு உங்கள் பெயர் கூடச் சரியாகத் தெரியவில்லை. உங்கள் சாகசச் செயல்களைக் கேள்விப்பட்டு நான் மகிழ்ச்சி அடைந்தேன். நாங்கள் இன்னும் சிலகாலம் கஷ்டமில்லாமல் கோட்டையைக் காப்பாற்றியிருப்போம். ஆனால், இந்தப் பிரெஞ்சுக்காரன் லாலி டூப்ளேயைப் போலில்லை. மிகவும் உக்கிரம் வாய்ந்தவன். பெருமையும் அதிகம். முதலிலிருந்தே அவனுக்கு உணவுத் தட்டுப்பாடுதான். அவன் எங்களிடம் இரண்டு பேரை அனுப்பியிருந்தான். ஒருவர் பாதிரி. தான் வெள்ளைப் பிராமணர் என்று சொல்லிக்கொண்டார். எங்களைப்போல் உடை அணிந்திருந்தார். அடுத்தவன் இராணுவக்காரன். அவர்கள் வந்து என்ன கேட்டார்கள் தெரியுமா? மாட்டிறைச்சி! தின்றுவிட்டு, எங்கள் கோட்டையை வெடிமருந்து வைத்துத் தகர்ப்பதற்கு! இந்துக்கள் பசுக்களைப் பவித்திரமாகக் கொண்டாடுகிறோம். எங்களிடமே வந்து இப்படிக் கேட்கிறானென்றால் பார்த்துக்கொள்ளுங்கள். குதிரை கீழே தள்ளியதுமல்லாமல் குழியையும் பறித்ததாம்!'

பேசியவர் சந்நியாசிதான். உடனிருந்தவர் ஆங்கிலேயர் லிட்டில்டன். மணம்புச் சாவடி வீட்டுத்தோட்டத்தில் தான் நடந்தவாறே பேசிக்கொண்டிருந்தார்கள்.

'ஆமாம், நான் கேள்விப்பட்டேன்' என்றார் லிட்டில்டன். சிலகாலம் வெயிலில் அலைந்திருந்ததால் இப்பொழுது அவர் முகம் முன்னைவிடச் சிவந்து காணப்பட்டது. மெல்லிய மீசையும் வைத்திருந்தார். 'லாலி திறமையும் புகழும் வாய்ந்த வீரர்தான். ஆனால், அவருக்கு இந்நாட்டு மக்களையோ அவர்கள் பழக்க வழக்கங்களைப்பற்றியோ ஒன்றும் தெரியாது.'

'அவருடைய இராணுவத் திறமையைப்பற்றிக்கூட எனக்கு சந்தேகமாகத்தான் இருக்கிறது. நீங்கள் குதிரைப் பாய்ச்சல் போனபோது அவர்கள் பாதுகாப்பில்லாமல் கவலையீனமாக இருந்திருக்கிறார்களே. அவர் ஏறக்குறைய சாகப் பார்த்தாரே' என்றார் சந்நியாசி.

'ஆமாம், பீதியடைந்து விட்டார்கள். நாங்கள் பாய்வோமென்று கனவிலும் எதிர்பார்க்கவில்லை.'

'பயிற்சி பெற்ற படை எந்தச் சந்தர்ப்பத்திலும் பீதியடையக்கூடாது' என்றார் சந்நியாசி. 'கள்ளர் கொரில்லாக்கள்கூட அவர்கள் பயத்தையும் குழப்பத்தையும் கண்டு சிரித்தார்களாமே.'

'பிரெஞ்சியர் தீரமான போர் வீரர்கள் தான். அவர்கள் எங்கள் நாட்டின் தொன்றுதொட்ட பகைவர்களானாலும் அதை ஒப்புக்கொண்டுதான் ஆகவேண்டும்' என்றார் ஆங்கிலேயர். 'ஆனால் திடீரென்று கலவரம் அடைந்துவிடுவார்கள், உணர்ச்சிவசமாகி அதை வெளிக்காட்டவும் செய்வார்கள்.'



'எனக்கு எந்தப் பரங்கியரையுமே பிடிக்காது, உங்களைச் சொல்லவில்லை' என்றார் சந்நியாசி சிரித்துக்கொண்டே. தோட்டத்தின் எல்லையை அடைந்துவிட்டதால் மறுபுறம் திரும்பி இருவரும் நடந்தார்கள். சந்நியாசி தொடர்ந்தார் :

'ஆனால், மற்றவர்களோடு ஒப்பிடுகையில் உங்கள் மீது எனக்கு வியப்பு உண்டாகிறது. உங்கள் உறுதி, ஆபத்துக் காலத்தில் மனவமைதி, துணிவு, அபார விடாமுயற்சி, காரிய சாதனை, தீவிர கடமையுணர்ச்சி இவற்றைக் கண்டு வியக்கிறேன்.'

'எங்களிடமும் நீங்கள் வியப்பதற்குரிய குணங்கள் இருப்பதாகக் கூறுவதை அறிந்து மகிழ்ச்சியடைகிறேன்' என்றார் லிட்டில்டன் சிரித்துக்கொண்டே.

'ஆனால், கண்ணுங் கருத்துமாகத் தளரா முயற்சியுடன் செயலாற்றும் உங்கள் திறனைக்கண்டு எனக்குப் பயமும் உண்டாகிறது. சீரழிந்த நிலையில் இருக்கும் எங்களிடம் இந்த இயல்புகள் தாம் இல்லை. பிரெஞ்சியரிடமும் இந்தக் குணங்கள் அதிகமாக இல்லையாதலால் அவர்களிடம் எனக்கு அச்சமில்லை.

ஆனால், நீங்கள் வித்தியாசமாக இருக்கின்றீர்கள். உங்கள் மந்த கற்பனாசக்தி, உல்லாச இயல்பின்மை இவையெல்லாம் உங்களுக்குச் சாதகமாக உள்ளன. குறிப்பாக எங்களைப்போன்ற மக்களிடம் விவகாரம் வைத்துக் கொள்ளும்போது மேற்சொன்ன குணங்கள் உங்களுக்கு மிகவும் உதவக்கூடும். உங்கள் விடாமுயற்சியோ அதிசயமானது என்றே சொல்லிவிடலாம். மேலும் உங்களுக்குத் தன்னம்பிக்கையும் தற்பெருமையும் அதிகமாக இருப்பதால் தோல்வியை ஒப்புக்கொள்வதில்லை. வெற்றி அடைந்தே தீருவோம் என்ற மனப்பான்மையோடும் நடந்துகொள்கிறீர்கள். வெகு தொலைவிலுள்ள அயல் நாட்டிலிருந்து அகதிகளைப்



போலிருப்பதாலும், ஒரே தொழிலில் ஈடுபட்டிருப்பதாலும் உங்களிடம் ஒற்றுமை உள்ளது. பிளவுகளாலும், முரண்பட்ட தொழில்களாலும் உங்கள் பலம் சிதறிப் போகவில்லை. இன்னும் இருபது முப்பது ஆண்டுகளில், பிரெஞ்சியரையும் டச்சுக்காரரையும் நாட்டை விட்டு ஒழித்துக் கட்டிவிட்டு, மொகலாயச் சக்கரவர்த்தியையும், சச்சரவிட்டுக்கொண்டிருக்கும் மராட்டியரையும், இராஜபுத்திரரையும் அடக்கி புண்ணிய பூமியாகிய பாரத நாடு முழுவதையும், உங்கள் ஆட்சிக்குள் இல்லாவிட்டாலும் ஆதிக்கத்துக்குள்ளாவது கொண்டு வந்து விட்டால் அதில் ஆச்சரியப்படுவதற்கொன்றுமில்லை' என்றார் சந்நியாசி.

'எங்களுக்கு இராச்சியம் வேண்டியதில்லை. கட்டுப்பாடில்லாத வர்த்தக உரிமைகளும், எங்கள் உயிருக்கும் உடைமைகளுக்கும் தகுந்த பாதுகாப்புமே தேவை. இந்த நாட்டின் பருவ நிலையில் எங்களுக்கு இங்கே நிரந்தரமாகத் தங்க முடியாது. கிழக்கில் இராஜ்ஜியம் நிறுவவேண்டுமென்பது எங்கள் விருப்பம் அல்ல .'

'டுப்ளே அப்படி நினைக்கவில்லை. அவன் உங்களுக்கு வழி காட்டிவிட்டுப் போயிருக்கிறான். ஒரு கொடுங்கோல் மன்னனின் இயல்புகள் அவனிடமிருந்தன. தந்திரசாலியும் கூட, அவர்கள் நியதியை மீறி இந்துவான ஆனந்தரங்கம் பிள்ளையைத் தனக்கு முக்கிய துபாஷியாக ஆக்கினான். உங்களுக்கும் அப்படிப்பட்ட ஒரு தலைவர் வாய்த்திருந்தால் உங்களுக்கு இருக்கும் மற்ற இயல்புகளுக்கு, நீங்கள் இந்நேரம் ஏகாதிபத்தியத்துக்கு அடிகோலியிருப்பீர்கள். நீங்கள் வர்த்தகர் என்று சொல்லிக்கொண்டாலும் அந்தத் தொழிலில் ஈடுபட்டிருக்கும் போது அரசுரிமை வந்து சேர்ந்தால், அதை உதறித்தள்ளி விடுவீர்கள் என்று எனக்குத் தோன்றவில்லை. அது மனித இயல்பு அல்ல' என்றார் சந்நியாசி.

திடீரென்று அருகிலிருந்து ஒரு இனிய பெண் குரல், 'பாபாஜி, ஐயோ பாம்பு! என்னைப் பாம்பு கடித்துவிட்டது' என்று பயந்து கிறீச்சிடுவது கேட்டது. இருவரும் திடுக்கிட்டுத் திரும்பினர்.

சத்தம் கிளம்பிய திசையில் விரைந்தார்கள். அங்கே ஓர் அழகிய பிராமணப் பெண் வலது காலை வேகமாக உதறிய வண்ணம் பயந்து கதறிக்கொண்டிருந்தாள். அவளது கணுக்காலுக்குமேல் ஒரு பாம்பு சுற்றிக்கொண்டிருந்தது. ஒரே வினாடியில் லிட்டில்டன் அவள் அருகே ஓடிச்சென்று குனிந்து பாம்பின் கழுத்தை இலாவகமாக அமுக்கிப் பிடித்தார். கழுத்தை மேலும் இறுக்கவே பாம்பின் பிடி சற்று தளர்ந்தது. உடனே அவள் காலிலிருந்து பாம்பை மெல்ல உருவி கீழே போட்டு, சப்பாத்துக்காலால் அதை நசுக்கிக் கொன்றார். பின் பெண்ணைப் பார்த்து இந்துஸ்தானியில் 'பாம்பு கடித்ததா?' என்று கேட்டார். அவள் 'ஆம்' என்று காலைக் காட்டினாள். சந்திரகாந்தக்கல்லில் இரத்தினம் பதித்தாற்போல் அவள் காலில் இரண்டு சிறிய இரத்தத் துளிகள் தென்பட்டன. உடனே அவர் குனிந்து அவள் காலைப் பிடித்து கடிவாயில் தன் விரல்களை வைத்து அழுத்திப் பிதுக்கினார். அவள் வலியால் கத்தினாள். கசிந்த இரத்தத்தைக் கைக்குட்டையால் துடைத்துவிட்டு, கடிவாயில் தன் வாயை வைத்து இரத்தத்தை உறிஞ்சித் தரையில் துப்பினார். அவளைப் பார்த்து, 'இனி ஒரு பயமுமில்லை, பயப்படவேண்டாம்' என்றார்.

சில நிமிடங்களுக்குள். இது நடந்துவிட்டது. சந்நியாசி திகைத்துப்போய் ஊமையாகப் பார்த்துக்கொண்டு நின்றார். அந்தப் பெண் தன் தாத்தாவிடம் நொண்டிக்கொண்டே ஓடினாள். தான் பூப்பறிக்க அங்கு வந்ததாகவும், சற்று உயரத்தில் இருந்த ஒரு ரோஜாவைப் பறிக்க முயலும்போது வழவழப்பாக ஏதோ ஒன்றை அவள் மிதித்ததாகவும், அதற்குள் பாம்பு அவள் வலது காலைச் சுற்றிக்கொண்டு இடது காலில் கடித்துவிட்டதாகவும் சொன்னாள். சந்நியாசி பாம்பின் தலையை உற்றுப் பார்த்துவிட்டு, 'விஷப்பாம்பு' என்றார், பேத்தியை வாஞ்சையுடன் வருடிக்கொண்டு.

'ஆமாம், கடிவாயிலிருந்து விறுவிறென்று வலி ஏறுகிறதா என்று கேளுங்கள்' என்றார் லிட்டில்டன்.

இல்லை, அந்த இடத்தில் மாத்திரம் சிறிது வலி இருக்கிறது' என்றாள் பெண்.

'அது நான் விஷத்தைப் பிதுக்கியதால் உண்டான வலி தான். அது விரைவில் மறைந்துவிடும்' என்றார் லிட்டில்டன்.

சந்நியாசி அவரை நன்றியோடும் வியப்போடும் பார்த்த வண்ணம், 'அந்தக் கொடிய விஷத்தை உறிஞ்சுவதின் மூலம்

உங்கள் உயிருக்கு ஏற்பட்டிருக்கக்கூடிய ஆபத்தையும் நீங்கள் பொருட்படுத்தவில்லை. உங்கள் உயிரையும் மதிக்காமல் அவளைக் காப்பாற்றியிருக்கிறீர்கள்' என்றார்.

தன் செயலை மிகைப்படுத்த விரும்பாத லிட்டில்டன் 'அதில் ஆபத்து ஒன்றும் இல்லை. பல் ஆழமாகப் பதியவில்லை. முதலில் விஷரத்தத்தை விரல்களால் பிதுக்கி வெளியேற்றியிருந்தேன். மேலும் என் வாயில் புண் எதுவும் இல்லை' என்றார்.

'எல்லாப் பரங்கிகளும் அவ்வளவு சுத்தமாக இருக்கிறதில்லை. நீங்கள் என் நாட்டை விடுவித்து உங்களுக்கும் புகழ் தேடிக்கொண்டது மட்டும் அல்ல, தனிப்பட்ட முறையிலும் மதிக்கவொணா அளவில் உங்களுக்கு என்னைக் கடனாளியாக்கி விட்டீர்கள். நான் எப்படி இதற்குக் கைமாறு செய்யப் போகிறேன்' என்றார்.

விட்டில்டன் அப்படி என்ன பிரமாதமாகச் செய்துவிட்டேன்?' மனிதர் ஒருவருக்கொருவர் செய்துகொள்ள வேண்டிய சிறு உதவி தானே?' என்றார். பின், 'நான் உதவி செய்ய வாய்ப்புக் கிட்டிய இந்தப் பெண் யாரென்று தெரிந்துகொள்ளலாமா? கேட்பதில் தவறில்லையே?' என்று கேட்டார்.

'ஓ, உங்களுக்கு பாயியைத் தெரியாதா?' என்றார் பெரியவர். அந்நியருக்குக்கூட பாயி தெரிந்திருக்க வேண்டும் என்பது அவரது எண்ணம். 'இவள், என் பேத்தி. என் ஒரே மகனின் ஒரே பெண். இவள் பிறந்த அன்று இவளுடைய பெற்றோர் இருவரும் போய்விட்டார்கள். உலகத்துக்கும் எனக்கும் உள்ள ஒரே தொடர்பு இவள் தான். என் நன்றியையும் மகிழ்ச்சியையும் நீங்கள் இப்போது உணர்ந்து கொள்வீர்கள் என்று நினைக்கிறேன். மகாதேவன் கருணையே கருணை. என் கட்டுப்பாட்டையும் மகிழ்ச்சியையும் எவ்வகையிலாவது தெரிவித்துக் கொள்ள அனுமதியளியுங்கள். நான் உங்களுக்கு ஏதாவது செய்யமுடியுமா, தயவு செய்து சொல்லுங்கள்' என்று கேட்டார்.

'தயவு செய்து இதைப்பற்றி இனிமேல் பேசாதீர்கள். அப்படி அதிகமாக ஒன்றும் செய்துவிடவில்லை. அந்த வேளையில் நான் அருகிலிருக்க நேர்ந்தது பற்றி நான் மகிழ்ச்சி அடைகிறேன்' என்றார் ஆங்கிலேயர்.

'இல்லை, இல்லை. உங்கள் சமயோசிதத்தாலும், ஆற்றலாலுமே என் பேத்தி இன்று பிழைத்தாள். அதற்காகவாவது–' என்றார் சந்நியாசி.

லிட்டில்டன், அவள் பறிக்க முயன்ற அழகிய பெரிய ரோஜாமலரைப் பறித்து அவளிடம் நீட்டி, 'இந்த விபத்துக்குக் காரணமாக இருந்த மலரை என் அன்பளிப்பாக, இந்தப் பெண்மணி பெற்றுக்கொள்வாளா? அதுவே எனக்குப் போதிய கைமாறாகும்' என்றார்.

மகிழ்ச்சியில் அவள் முகம் சிவந்தது. அடக்கத்துடனும், நன்றியுடனும் அதை அவள் அவர் கையினின்று எடுத்துக் கொண்டாள். பின் நாணத்துடன் தன் பாபாவிடம், 'இந்தக் கனவான் தீரர் மாத்திரம் அல்ல, கருணையுடையவராகவும் இருக்கிறார். ஏற்கெனவே செய்த உபகாரம் போதாதென்று மேலும் நம்மை, நன்றிக் கடனாளியாக்குகிறார்' என்றாள்.

அவள் இதைத் தவறில்லாத சரளமான இந்துஸ்தானியில் சொன்னாள். சொற்கள் நேரே சென்று லிட்டில்டனின் இதயத்தில் பாய்ந்தன. விவரிக்கமுடியாத மகிழ்ச்சியும் பெருமையும் அடைந்தார். சந்நியாசி பேத்தியிடம் திரும்பி,'பாயி, உனக்கு இவரைத் தெரியாதா? நான் ஸ்ரீசைலத்தில் பார்த்ததாகச் சொன்ன கனவான் இவர் தான். அப்பொழுது இவர் காப்பாற்றுவதற்கு வரவில்லை, கொல்வதற்கு வந்தார். முற்றுகையினின்று நம்மை விடுவித்ததாக வெங்கோபா சொன்ன வீரரும் இவர்தான்' என்றார்.

லிட்டில்டன் சிரித்துக்கொண்டே 'நான் ஸ்ரீசைலத்தில் அன்று ஏறக்குறைய உங்களைச் சுட்டேவிட்டேன். அதற்குப் பரிகாரமாக ஏதாவது செய்வது நியாயந்தானே?' என்றார். பாயி புன்முறுவலுடன், 'இப்பொழுதுகூட கொன்றுதானிருக்கிறார் நச்சுப்பாம்பை. விஷ்ணுவைப்போல் சிஷ்ட பரிபாலனம் துஷ்ட நிக்கிரகம் செய்கிறார். அரச லட்சணம் அது' என்றாள்.

சந்நியாசி மிகவும் பெருமிதமடைந்தவராக 'நன்றாகச் சொன்னாய்!' என்றார். தொடர்ந்து, 'எப்படியானாலும் இந்த நிகழ்ச்சியின் நினைவாக நான் ஏதாவது செய்ய விரும்புகிறேன். பாயி! நகரம் விரைவில் விடுதலை பெற நீ சமஸ்கிருதப் பிரார்த்தனை எழுதி அனுப்பியதைப் பாராட்டி, மகாராஜா உனக்கு அளித்த மரகதப் பதக்கத்தை எடுத்துக்கொண்டுவா அம்மா. நம்மை விடுவிக்க தெய்வம் இன்று இவரை அனுப்பியிருக்கிறது. நமது நன்றியுணர்ச்சியின் அற்ப அடையாளமாக இவர் அதை அணிந்து கொள்ளட்டும்' என்றார்.

பெண் உடனே வீட்டினுள் ஓடிச்சென்று, ஆபரணத்தைக் கொண்டுவந்து சந்நியாசியின் கையில் கொடுத்தாள். சந்நியாசி தமாஷாக, 'நீயே அவரிடம் கொடு. அவர் உன் உயிரைத்தானே காப்பாற்றினார்? என்னைக் கொல்ல அல்லவா பார்த்தார்? அவரே தான் அதைச் சற்று முன்பு ஒப்புக்கொண்டாரே' என்றார்.

பெண்ணின் முகம் மிகவும் சிவந்தது. நகையை லிட்டில்டனின் கைகளில் வைத்தாள். அவர் அதை நாகரிகமாகக் குனிந்து பெற்றுக்கொண்டார். பின் அதைக் கூர்ந்து நோக்கி 'மிகச் சிறந்த பொருள்! அழகான ஆபரணம் இந்தப் பெண்மணி அதை இழந்துவிடுவதை நான் விரும்பவில்லை. இவள் அதை அணிந்து கொண்டால் நகை மேலும் அழகும் ஒளியும் பெறும். இந்த முரட்டுப் போர் வீரன் அணிந்துகொண்டாலோ இருக்கின்ற அழகும் போய் விடும்! கோழைகட்கத்தை அணிவதுபோல' என்றார்.

சந்நியாசி உவகை மிகுந்தவராய் 'உங்கள் பேச்சில் கீழ்நாட்டு மணம் வீசுகிறது. உங்களுக்கு சமஸ்கிருதம் அல்லது உருது தெரியுமா?' என்று கேட்டார். 'திருச்சிராப்பள்ளியில் உள்ள முஸ்லிம் படையில் உப அதிகாரி ஒருவர் இருக்கிறார். நல்ல உருது அறிஞர். அவரும் நானும் நண்பர்கள். உங்களுக்குக்கூட அவரைத் தெரிந்திருக்கலாம். முன்னால் உங்களிடம் தான் வேலையில் இருந்தார். அவர் பெயர் ஷெர்கான். உருதுக் கவிகளை எனக்குப் படித்துக்காட்டி விளக்கமும் சொல்வார். பூவோடு சேர்ந்த நாரும் மணம் பெற்றுவிட்டது' என்றார்.

'நல்லோர் சேர்க்கையை நன்கு பயன்படுத்திக் கொள்கிறீர்கள்' என்றார் சந்நியாசி. பேத்தியைப் பார்த்து' நீ, உள்ளே போ அம்மா. ராகவனிடம் சொல்லி சுற்றுப்புறத்தை அடிக்கடி சுத்தம் செய்யச் சொல்லவேண்டும்' என்றார்.

**தொடரும் ...**




# சென்னை அருகே கிறிஸ்தவ மிஷன் கிராமங்கள்

ஆடம் ஆண்ட்ரூவும் (Adam Andrew) அவர்களும் அவரது மனைவி எலிசபெத்தும் சென்னையின் அருகே உள்ள செங்கல்பட்டுக்கு 1879ஆம் ஆண்டு மிஷனெரி பணிக்காக வந்தனர். 35 ஆண்டுகள் அந்த பகுதியில் உள்ள பல கிராமங்களில் அவர்கள் ஊழியம் செய்தனர். கடவுளின் கிருபையால் அவர்களின் அயராத உழைப்பினாலும் அங்குள்ள மக்கள் கிறிஸ்துவின் அன்பை அறிந்து கொண்டனர். அவர்களுக்கு முன்னே ஜான் ஆண்டர்சன் மற்றும் மெக்ஜெர் ஆகிய மிஷனெரிகள் செங்கல்பட்டை சுற்றி பணிபுரிந்தனர். இருப்பினும், அங்கேயே தங்கி பணிகள் செய்யவில்லை.

1879 ஆம் ஆண்டு செங்கல்பட்டில் ஒரு தேவாலயம் கூட இல்லை. 20 கிறிஸ்தவர்கள் அடங்கிய ஒரு சிறு குழுவும் அருகே காஞ்சிபுரம், வாலாஜாபாத் ஆகிய இடங்களில் உள்ள கிறிஸ்துவ பள்ளிகளோடு இணைக்கப்பட்டிருந்தன. இவர்களின் ஆலயம் சென்னை பிராட்வேயில் உள்ள ஆண்டர்சன் ஆலயம்.

ஆண்ட்ரூவின் வருகைக்குப் பின்னர் செங்கல்பட்டு ஊரிலேயே திருச்சபை நிறுவி அவர் பொறுப்பேற்றார். அவரின் உழைப்பு அபாரமானது, வெகு விரைவில் தமிழ் கற்றார், தன்னுடைய வேலையில் கட்டுப்பாட்டோடும் சீரோடும் காணப்பட்டார். ஸ்காட்லாந்தில் உள்ள சபைக்கு அவர் அனுப்பிய குறிப்புகளிலிருந்து ஒரு தொகுப்பு:-

1888 ஆம் ஆண்டு
5340 பிரசங்கங்கள்
1,77000 மக்களுக்கு உரைத்தார்
1542 இந்து குடும்பத்தினரை வீட்டுக்குச் சென்று சந்தித்தார்;
25,000 கைப்பிரதிகள் கொடுத்தார்;
1699 திருமறைகள் மற்றும் அதின் பாகங்களை விநியோகம் செய்திருந்தார்.

வெயிலுக்கு அஞ்சாமல் நடந்தே தன்னுடைய ஊழியத்தை செய்தார். அவர் இப்படி சுற்றித் திரியும்போது அவர் எல்லா காரியங்களையும் பார்த்து அறிந்து கொண்டார் - விவசாயம், நீர்ப்பாசனம், மக்களின் வாழ்வு நிலை ஆகியவற்றில் அதிக ஈடுபாடு கொண்டார். ஒரு கிராமம் எப்படி செயல்பட்டது என்பதை நுட்பமாக புரிந்துகொண்டார். அவர்களின் வெவ்வேறு ஜாதி மற்றும் பொருளாதார பொருளாதார கட்டமைப்பு என்னவென்று அறிந்துகொண்டார்.

அவர் வந்த பத்து ஆண்டுகள் கிராமம் கிராமமாக பணி செய்தும் பெரும் அளவில் மக்கள் கிறிஸ்துவை ஏற்றுக் கொள்ளவில்லை. அவருக்கு ஆச்சரியம் உண்டாகும் வகையில் ஒரு பெரும் இயக்கம் அவ்விடத்தில் உருவாக ஆரம்பித்தது. அந்த சுற்று வட்டாரத்திலுள்ள தலித் மக்கள் அதிக அளவில் அவரிடம் வந்து தங்களுக்கு இயேசுவைப் பற்றி கூறுமாறு கேட்டுக்கொண்டனர். தங்களுக்கு கல்வியைப் புகட்ட பள்ளிகள் அமைக்குமாறும் கேட்டுக் கொண்டனர். திருமறையில் தோன்றிய விடுதலை சார்ந்த கருத்துக்களையும் கதைகளையும் ஆர்வமாக கேட்டு அறிந்தனர். அந்த மக்களுக்கும் மிஷனெரிகளுக்கும் இடையே நட்பும் நம்பிக்கையும் மலர்ந்தது.

மக்கள் கூட்டம் கூட்டமாக இயேசு கிறிஸ்துவை ஏற்றுக் கொண்டனர். 1915 ஆம் ஆண்டு இறுதியில் ஆண்ட்ரூ மற்றும் அவரது பணியாளர் குழுவும் செய்த காரியங்களின் பட்டியல் -

67 பள்ளிகள்

191 ஆசிரியர்கள்

2722 மாணவர்கள் அதில் 2145 மாணவர்கள் கிறிஸ்தவர்

இதன் காரணமாக அந்தந்த ஊர்களில் மிராசுதாரர்கள் மற்றும் நில உரிமையாளர்கள் கோபம் ஆகினர். கிறிஸ்தவர்களாக மாறிய மக்களுக்கு வேலை வாய்ப்புகளை நிறுத்தி அவர்களை துன்புறுத்தினர். கிறிஸ்தவ மக்களின் சொற்ப நிலம் வீடுகளும் தீக்கிரையாக்கப்பட்டன. சிலரால் மட்டுமே வேறு இடங்களுக்கு தப்பிச்செல்ல முடிந்தது. ஆடம் ஆண்ட்ரூ அம்மக்களின் கஷ்டத்தை அறிந்து கிறிஸ்தவர்களான அவர்கள் வாழ்வதற்காக புது கிராமங்களை உருவாக்கினார். 1892 ஆம் ஆண்டு பெரும்தண்டலம் என்ற கிராமத்தில் துன்புறுத்தப்பட்டு வெளியேரின மக்களுக்காக 4 ஏக்கர் நிலம் வாங்கப்பட்டு இந்த பகுதியில் முதல் கிறிஸ்துவ கிராமம் உருவாகினது. அங்கு குடிபுகுந்த மக்களுக்காக பள்ளி,ஆலயம், ஆசிரியருக்கான வீடு, கிணறு ஆகியவற்றை அமைத்துக் கொடுத்தார். Rev.ஆடம் ஆண்ட்ரூ. ஆண் பெண் இருவருக்குமான கூலி ஒன்றே என்று கிணறு வெட்ட வந்த மக்களுக்கு சமமான ஊதியம் கொடுத்தார். 1895 ஆம் ஆண்டிற்குள் அந்த ஊரில் 60 மக்கள் குடியமர்ந்தனர். நன்றியோடு கலந்த ஞாபகச்சின்னமாக அவர் பெயரே அந்த ஊருக்கு வழங்கப்பட்டது - அந்திரேயாபுரம் (Andreyapuram).

இதுபோல 1893ஆம் ஆண்டு செங்குன்றமிலிருந்து சில குடும்பங்கள் குடியேறின ஊரின் பெயர் மெல்ரோசபுரம். (Melrosapuram) இந்த பணிகளுக்கு அவர்களுக்கு பணம் சேகரித்து ஸ்காட்லாந்திலிருந்து உதவினர். பெயர் மெல்ரோஸ்.

1896 ஆம் ஆண்டு 13 குடும்பங்கள் மற்றுமொரு சொந்த கிராமத்தை விட்டு சித்திரவதை காரணமாக குடிபெயர்ந்தனர். அவர்களுக்கு கொடுக்கப்பட்ட இடம் கிடைக்க காரணமாக இருந்தது ஓவர்டவுன் ஆவார். எனவே அந்த கிராமத்துக்கு ஓவெர்ட்டன்பேட்டை (Overtenpettai) என்று பெயர் சூட்டினர்.

சுற்றுவட்டாரங்களில் மற்ற மிஷனெரிகளும் இதேபோல மக்களை பாதுகாக்கும் எண்ணத்துடன் அவர்களுக்கு வேறு இடங்களில் வாழ்வாதாரத்திற்கு வழி செய்தனர். சமூகத்தில் அடித்தள மக்களுக்கு நம்பிக்கை பிறந்தது. பலர் இந்த கிறிஸ்துவ சீர்த்திருத்த இயக்கத்துடன் தங்களை இணைத்துக் கொண்டனர். செங்கல்பட்டு காஞ்சிபுரம் ஸ்ரீபெரும்புதூர் என்று மூன்று தளங்களாக பிரிக்கப்பட்டு ஸ்காட்லாந் மிசன் பணிகள் சிறப்பாக செயல்பட்டன.

(Lord Pentland, governor of Madras, paid a visit Melrosapuram in 1914 during which he praised the work. In a government communiqué issued in 1920 reviewing all that had been done to improve the Depressed Classes in the Madras Presidency, Melrosapuram was hailed as a most successful Panchama settlement - GOR 559, March 8, 1920)

(தகவல்கள் இந்த புத்தகத்திலிருந்து :- St.Andrews Church 1893 -2018 : Celebrating 125 years – Souvenir. April 2018)

**ரோடா அலெக்ஸ் , சென்னை**



அருள்திரு .Hஜான் சாமுவேல் , பண்டார செட்டிவிளை

கிறிஸ்துவை அறிமுகப்படுத்திய

# மிஷனெரிகளின் பெயரை கொண்ட கிராமங்கள்

பரந்த நிலமும், நிறைந்த கலாச்சாரமும் கொண்ட பாரத தேசத்தின் கடைமுனைப் பகுதியில் அமைந்துள்ள நமது தமிழகத்தில் கிறிஸ்தவம் பரவ தொடங்கின காலம் மொத்த ஜனங்களின் வாழ்வையும் மாற்றுவதற்கு ஒரு தொடக்கமாக அமைந்தது. குறுநில மன்னர்களும், பெரிய ராஜாக்களும் அரசாண்ட தமிழகத்தில் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் அரசு ஆளுகை செலுத்த ஆரம்பித்தது. கிழக்கத்திய கம்பெனி என்ற பெயரில் வியாபார நோக்குடன் தேசத்தில் காலடி பதித்த மக்கள் நாளடைவில், தேசத்தின் செழுமையினையும், பிரிவினைவாதத்தையும் பயன்படுத்தி அடிமைகளாக்கிக் கொண்டார்கள். எனினும் சில நல்ல உள்ளம் கொண்ட மகான்கள் மிஷனெரிகள் என்ற பெயரிலே நம் பகுதியடைந்து கிறிஸ்துவின் அன்பினையும், இரட்சிப்பையும் அறிமுகப்படுத்தினார்கள். தம்முடைய நேரத்தையும் காலங்களையும் செலவிட்டு மக்களின் முன்னேற்றத்திற்காக பாடுபட்ட மிஷனெரிகள் தான் இன்று அநேக கிறிஸ்தவ கிராமங்களின் தந்தை என்றும் அழைக்கப்படுகின்றனர். இன்னும் நன்மை பெற்ற அநேகர் தங்கள் கிராமங்களுக்கு, கிறிஸ்துவை அறிமுகப்படுத்திய மிஷனெரிகளின் பெயரையே தங்கள் கிராமங்களுக்கு கொடுத்திருக்கின்றார்கள். அவைகளின் தொகுப்பை காண்போம்.

**கிறிஸ்தியா நகரம்**

தமிழகத்தில் தென்பகுதி மிக ஆசீர்வதிக்கப்பட்ட பகுதிகளுள் ஒன்றெனலாம். இப்பகுதிகளின் ஆசீர்வாதத்திற்கு வித்திட்டவர் கனம் ஷ்வார்ட்ஸ் ஐயரவர்கள். தம்முடைய ஊழியத்தினை தமிழகத்தில் ஆரம்பித்த நாள் முதல் திருநெல்வேலி பகுதியில் மிகுந்த கவனம் செலுத்தினார்கள். 1778ம் ஆண்டு பாளையங்கோட்டை பகுதிக்கு அவர்கள் செய்த விஜயம் பாளையங்கோட்டை பகுதியில் பெரிய மாற்றத்தை உண்டுபண்ணியது. செழித்து விளைந்த பகுதி போன்று ஆத்துமாக்கள் நிறைந்த பகுதியாகவே அதைக் கண்டார். ஷ்வார்ட்ஸ் ஐயரவர்களின் ஆத்தும தாகத்தின் விளைவாக கனம் சத்தியநாதன் ஐயர் அவர்களை 1786ம் ஆண்டு பாளையங்கோட்டை பகுதிக்கு அனுப்பினார்கள். கனம் சத்தியநாதன் ஐயரவர்களின் பெரும் ஊழியத்தினால் தோன்றிய சபைகளில் ஒன்று தான் குலசேகரப்பட்டினம் சபை. ஆரம்பக்காலங்களில் ரோமன் கத்தோலிக்க திருச்சபையை சார்ந்தவர்கள் ஞானஸ்நானம் பெற்று குலசேகரப்பட்டினம் திருச்சபையில் இணைந்தார்கள். பின்னர் பிற சமயத்தை சார்ந்தவர்களும் ஞானஸ்நானம் பெற்று, சபை வளர்ந்து பெருக ஆரம்பித்தது.



நாட்கள் வேகமாக கடந்து சென்றது, ஆனால் கிறிஸ்தவமோ, மிஷனெரிகள் எதிர்பார்த்த வண்ணம் பெருகவில்லை . ஆண்டவரின் அனுகிரக வருடம் 1820ம் ஆண்டு மறுபடியுமாக பாளையங்கோட்டை பகுதிக்கு கிடைக்க ஆரம்பித்தது. 1820ம் ஆண்டு கனம் ரேனியஸ் ஐயரவர்கள் தங்களின் ஊழியத்தினை பாளையங்கோட்டையில் ஆரம்பித்தார்கள். கனம் ரேனியஸ் ஐயரவர்களின் ஊழியம் மற்ற ஊழியர்களின் யுக்தியைக் காட்டிலும் வேறுபட்டது. எனவே தன்னுடைய குறுகிய காலத்திற்குள்ளாக பல நூறு திருச்சபைகளை உருவாக்கி, ஆலயங்களை கட்டி, பள்ளிக்கூடங்களையும் நிறுவினார்கள். ஆலயங்கள் கட்டுவதற்கு எதிர்ப்புகள் உள்ள பகுதியில் முதலாவது பள்ளிக்கூடம் கட்டி, அம்மக்களுக்கு கல்வி அறிவினைக் கொடுத்தார்கள். நாளடைவில் கிறிஸ்துவின் அன்பினைக் கூறி அவர்களை கிறிஸ்து மார்க்கத்திற்குள்ளாக வழிநடத்தினார்கள்.

கிறிஸ்தியாநகரத்தின் ஆதி பெயர் ஆதியாக்குறிச்சி ஆகும். இன்றைக்கு இப்பகுதிகள் யாவும் உடன்குடி என்ற பொதுப்பெயருடன் அழைக்கப்பட்டு வருகிறது. இப்பகுதி மக்கள் கல்வி கற்பதில் மிக ஆர்வமாக இருந்திருக்கிறார்கள். வெற்றிலைக் கொடிகாலும், பனையுமே தஞ்சம் என்று பெரியவர்கள் இருந்தாலும் தங்கள் பிள்ளைகள் படிக்க வேண்டுமென்ற ஆர்வமுடையவர்களாக இருந்தார்கள். உடன்குடி மக்களின் ஆர்வமும், ரேனியஸ் ஐயரவர்களின் யுக்தியும் ஒன்றிணைய ஒரு வாய்ப்பு உருவானது. 1882ம் ஆண்டு உடன்குடியிலிருந்து சில பெரியவர்கள் சென்று தங்கள் கிராமத்திற்கு பள்ளிக்கூடம் ஒன்று வேண்டுமென்ற கோரிக்கையினை முன்வைத்தார்கள். கனம் ரேனியஸ் ஐயரவர்களும் மக்களின் கோரிக்கையினை ஒரு நிபந்தனையோடு கூட முன்வைத்தார்கள். பள்ளியில் பணிபுரியும் ஆசிரியருக்கான

ஊதியத்தினை ஊரார் பொறுப்பேற்றுக் கொள்ளவேண்டுமென்பதே அந்நிபந்தனையாகும். ஊரார் சம்மதம் தெரிவிக்கவே உடன்குடியில் 1823ம் வருடம் முதல் பள்ளிக்கூடம் உதயமானது. பள்ளிக்கூடத்தின் வாயிலாக கிறிஸ்துவைக் குறித்ததான நற்செய்தியை உடன்குடி மக்கள் கேட்டறிந்து விசுவாசத்திற்குள்ளாக வந்தார்கள். எனினும் ஞானஸ்நானம் பெறுவதற்கோ அல்லது இன்னும் மார்க்கத்தின் சத்தியத்தினை அறிந்துக் கொள்ளுவதற்கோ அவர்களுக்கு வாய்ப்புக் கொடுக்கப்படவில்லை.

உடன்குடி பகுதிக்கென தனியாக மிஷனெரிகள் நியமிக்கப்படாத காரணத்தால், மிஷன் பணிகளில் குறிப்பிட்டு சொல்லும் அளவிற்கு வளர்ச்சிகள் இக்காலத்தில் காணப்படவில்லை. சில காலம் கழித்து கர்த்தரின் அனுக்கிர பார்வை உடன்குடி பகுதியின் மேல் விழுந்தது. 1839ம் ஆண்டு கனம் கிறிஸ்தியான் கோலாப் ஐயரவர்கள் S.P.G சங்கத்தின் சார்பாக முதலூர் பகுதிக்கு மிஷனெரியாக நியமிக்கப்பட்டார். கனம் கோலப் ஐயரவர்கள் புகழ் பெற்ற கோலப் வம்சத்தில் தோன்றியவர் ஆவர். இவரது பாட்டனார் அருள்திரு J. பெஸ்தாத்சார் கோலாப் ஐயரவர்கள், ஜெர்மனியிலுள்ள பொமரேனியா மாகாணத்தில் நியுவார்ப் நகரத்தில் 1711ல் பிறந்து 1737ம் ஆண்டு டேனிஷ் மிஷனெரியாகத் தரங்கம்பாடிக்கு வந்து அங்கு 53 ஆண்டுகள் ஊழியம் செய்தார். இவரது மகனாகிய ஜாண் கஸ்பர் கோலப் ஐயரவர்கள் 1762ல் தரங்கையில் பிறந்து, ஷ்வார்ட்ஸ் ஐயரிடத்தில் குருபட்டம் பெற்று, தஞ்சாவூரில் 57 வருடங்கள் மிஷனெரியாக பணியாற்றினார்கள். கனம் ஜாண் கஸ்பர் கோலப் ஐயரவர்கள் சில காலம் பாளையங்கோட்டை மற்றும் திருநெல்வேலி ஆகிய பகுதிகளில் அப்போது இருந்த சபைகளை மேற்பார்வையிட்டு வந்தார்கள். அச்சமயமே நாசரேத் மிஷனுக்கென்று நிலங்கள் வாங்கப்பட்டு ஊழியம் சிறந்தோங்கியது. கனம் ஜாண் கஸ்பர் கோலப் ஐயரவர்கள் தன் ஓட்டத்தை முடித்து 1844ம் வருடம் தஞ்சையில் மரித்தார்கள்.

ஜாண் கஸ்பர் ஐயர்வர்களின் மகன் தான் கிறிஸ்தியான் கோலப் ஐயரவர்கள். 1815ம் ஆண்டு மே மாதம் 4ம் தேதி அன்று கிறிஸ்தியான் கோலப் ஐயரவர்கள் தஞ்சையில் பிறந்தார்கள். பள்ளி படிப்பை முடித்தபின்பு 1831ம் ஆண்டு கொல்கத்தாவிருந்த பிஷப்ஸ் வேதாகம கல்லூரியில் வேதசாஸ்திரம் கற்ற பின்பு 1839ம் ஆண்டு முதலூருக்கு மிஷனெரியாக நியமிக்கப்பட்டார்கள்.

முதலூரில் தன்னுடைய ஊழியத்தினை நிறைவேற்றினாலும் கூட அதின் அருமையிலுள்ள கிராமங்களுக்கும் சென்று போதிப்பதுண்டு. கோலப் ஐயரவர்களின் ஊழியம் உடன்குடி பகுதிவரைக்கும் எட்டியது. பள்ளிக்கூடத்தின் மூலமாக கிறிஸ்துவைக் குறித்து சற்று அறிந்திருந்த மக்கள், கனம் கோலப் ஐயரவர்களின் ஊழியத்தினால் இன்னும் அதிகமாக அறிந்து, தங்களை உத்தம கிறிஸ்தவர்களாக மாற்ற விரும்பினார்கள். ஊர் மக்களில் கிறிஸ்தவ விசுவாசத்தில் நிலைத்திருக்க விரும்பியவர்கள் கூடி, கனம் கோலப் ஐயரவர்களை சந்திக்க விரும்பினார்கள். 1839ம் வருடம் ஊர் பெரியவர்களில் சிலர் முதலூர் சென்று கனம் கோலப் ஐயரவர்களை சந்தித்து, தாங்கள் கிறிஸ்தவர்களாக மாற ஞானஸ்நானம் பெற வேண்டுமென்கிற விருப்பத்தை தெரிவித்தார்கள். கனம் கோலப் ஐயரவர்களும் அவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுக்க சம்மதித்து, உடன்குடி மக்கள் இன்னும் அதிகமாய் கிறிஸ்து மார்க்கத்தில்



தேறும்படியாகவும், ஞானோபதேசத்தை நல்ல முறையில் கற்றுகொள்ளும்படியாகவும் ஏசுவடியான் என்னும் உபதேசியாரை அவர்களுக்கு நியமித்து ஊழியத்தினை ஏற்படுத்தினார்கள். உடன்குடி மக்களில் 86 பேர் ஞானஸ்நானம் பெறுவதற்காக ஆயத்தப்பட்டுக் கொண்டிருந்தார்கள். அச்சமயம் வழிநடத்திய குருவானவர் அவர்கள் சற்றும் மாற்றப்பட்டது மக்களுக்கு பெரும் துக்கத்தை ஏற்படுத்தியது. உடன்குடி பகுதியில் காணப்பட்ட விசுவாசிகள் இணைந்து ஒரு காரியத்தினை செய்ய திட்டமிட்டார்கள். தங்கள் வசிக்கும் பகுதிக்கு தங்களை கிறிஸ்து மார்க்கத்திற்குள்ளாக நடத்திய கனம் கிறிஸ்தியான் கோலப் ஐயவரவர்களின் பெயரை தங்கள் கிராமமான ஆதியாக்குறிச்சிக்கு வைக்கத் திட்டமிட்டார்கள். அதின் அடிப்படையிலேயே ஆதியாக்குறிச்சி என்ற தங்கள் கிராமத்தை கிறிஸ்தியாநகரம் என்று பெயரிட்டு குருவானவருக்கு மரியாதையும் அன்பையும் செலுத்தினார்கள்.

**சாயர்புரம்**

தமிழகத்தின் பெயர் பெற்ற துறைமுகமாக விளங்கியது கொற்கை துறைமுகமாகும். கொற்கை பாண்டியர்களின் முதல் தலைநகரமாக விளங்கியது. ஒரு காலத்தில் கொற்கை முத்து நகரமாகவும், பாண்டிய நாட்டின் வணிகத் துறைமுகமாகவும் விளங்கியது. அதுமட்டுமின்றி இது பாண்டியர்களின் கப்பற்படைத் தளமாகவும் இருந்தது. சங்க இலக்கியங்களில் கூட இந்நகரமானது குறிப்பிடப்பட்டுள்ளதை காணமுடியும். இக்கொற்கையின் அருகே பரந்து விரிந்த தேரி மணல் காடு ஒன்று இருந்தது. இத்தேரிப்பகுதியில் சுமார் 6000 வருடங்களுக்கு முன்னதாக கற்காலத்தை சார்ந்த மனிதர்கள் வாழ்ந்ததாக இன்றும் அகழ்வாராய்ச்சியில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இத்தேரியானது பெருங்குளம், சுப்பிரமணியபுரம், புதுக்கோட்டை ஏரல் ஆகிய பகுதி வரைக்கும் பரவி இருந்தது.

1815ம் ஆண்டிற்கு முன்னதாகவே இப்பகுதியில் கிறிஸ்துவின் நற்செய்தி அறிவிக்கப்பட்டு ஒரு சிலர் கிறிஸ்தவ நம்பிக்கைக்குள்ளாக வளர்க்கப்பட்டிருந்தார்கள், அக்காலத்தில் புதிகாக கிறிஸ்துவை ஏற்றுக்கொள்பவர்களுக்கு பலவித உபத்திரவங்கள் கொடுக்கப்பட்டு வந்தது. அநேகர் ஊரிலிருந்து விலக்கப்பட்டு இருந்தார்கள். ஊர் கிணற்றில் தண்ணீர் எடுக்க அனுமதி மறுக்கப்பட்டது. ஊரில் வேலை செய்வதற்கோ அல்லது மற்ற இனத்தார்களோடு பேசுவதற்கோ தடை செய்யப்பட்டு, அவர்கள் தனிமையாக வாழ வேண்டிய சூழல் ஏற்பட்டது. கிறிஸ்துவை ஏற்றுக்கொண்ட மக்கள் தங்கள் சொந்த இல்லங்களை இழந்து வீடு வாசலற்ற நிலையில் வாழ்ந்து கொண்டு வந்தார்கள். இம்மக்களின் வாழ்வில் விடியல் உண்டாக்கும்படியாக



இப்பகுதிக்கு அனுப்பப்பட்டவர் தான் திரு. சாமுவேல் சாயர் ஆவார்.

திரு. சாமுவேல் சாயர் அவர்கள் 1776ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 11ம் தேதி பிறந்தார். ஐரோப்பிய தேசத்தை சார்ந்த இவரது குடும்பம் அரசு பதவிகளில் இருந்து இந்திய தேசத்தில் வாழ்ந்து வந்தார்கள். இவருடைய தகப்பனார் பெயரும் சாமுவேல் சாயர் என்பதாக அறிகின்றோம். தகப்பனார் திரு சாமுவேல் சாயர் அவர்கள் கடற்படையில் கமாண்டராக பணியாற்றியிருக்கிறார்கள். 1776ம் ஆண்டு பிறந்த சாமுவேல் சாயர் அவர்கள் 25.10.1778ம் ஆண்டு தஞ்சையில் ஞானஸ்நானம் பெற்றிருக்கிறார்கள். நல்ல கிறிஸ்தவ குடும்பத்தில் பிறந்த சாமுவேல் சாயர் அவர்கள், நல்லொழுக்கம் நிறைந்தவராக வளர்க்கப்பட்டிருக்கின்றார்கள். நல்ல கல்வியை கற்ற சாமுவேல் சாயர் அவர்கள் பிற்காலத்தில் ஒரு தலை சிறந்த வியாபாரியாக தன்னை வளர்த்துக் கொண்டார். ஆரம்பகாலத்தில் கப்பல் நிறுத்துமிடத்திலுள்ள ஆங்கிலேயருக்கு உணவுப்பொருட்களை விற்கும் வியாபாரம் செய்து வந்தார். தன்னுடைய வருமானத்தில் கிடைத்த பணத்தைக் கொண்டு சுப்பிரமணியபுரத்திற்கு அருகே பரந்து கிடந்த தேரி பகுதியில் 150 ஏக்கர் நிலத்தை வாங்கினார். திருநெல்வேலியில் சாமுவேல் சாயர் அவர்களின் ஊழியம் சிறந்ததாக காணப்பட்டது. பல ஆலயங்களுக்கு பொக்கிஷதாரராக இருந்து அங்கு பணிபுரியும் ஊழியர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் சம்பளம் கொடுத்து வந்தார். அச்சமயத்தில் பாளையங்கோட்டையில் நல்லதொரு ஊழியத்தினை நிறைவேற்றி வந்த கிளாரிந்தா அம்மையாருக்கு நெருங்கிய நண்பராக இருந்தார். அச்சமயங்களில் பணியாற்றிய கனம் ரிங்கில்தோபே என்ற குருவானவர் அருகாமையில் இருந்த கிராமங்களுக்குச் செல்ல, சாமுவேல் சாயர் அவர்கள் தன்னுடைய குதிரையினைக் கொடுத்து உதவியிருக்கின்றார். பின்னர் 1814ம் ஆண்டு தன்னை ஒரு முழு நேர C.M.S மிஷனெரியாக அர்ப்பணித்து ஊழியத்தினை தொடங்கினார். சில குழப்பங்களுக்கு பின்னர் மறுபடியுமாக தன் பணியை ஆரம்பிக்காமலேயே திருநெல்வேலி வந்து சேர்ந்தார்.

புதிய கிறிஸ்தவர்களுக்கு நெருக்கம் மிக அதிகமாகவே 1810ம் ஆண்டு SPCK பெயரில் வாங்கிய இடத்தை 1814ஆம் ஆண்டு ஒடுக்கப்பட்ட கிறிஸ்தவர் மக்கள் குடியேறும்படியாக அவர்களுக்குக் கொடுத்தார். பலவகைகளில் துன்புறுத்தப்பட்ட மக்கள் தங்களுக்கு புதிதாக கிடைத்த அந்த இடத்தில் குடியேறினார்கள். சாமுவேல் சாயர் அவர்கள் மக்களின் சந்தோஷத்தைக் கண்டு மகிழ்ந்தார். எனினும் அவருடைய மகிழ்ச்சி அதிக நாட்கள் நீடிக்கவில்லை. 1815ம் ஆண்டு திடீரென ஏற்பட்ட சுகவீனத்தின் நிமித்தம் அவருடைய உடல் நிலை மிக மோசமானது. 1815ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 18ம் தேதி அன்று இவ்வுலகத்தின் ஓட்டத்தை முடித்து திரு. சாமுவேல் சாயர் அவர்கள் விண்ணுலகப் பிரயாணத்தை மேற்கொண்டார்கள். தங்களுக்கு ஒரு இருப்பிடத்தை உருவாக்கிக் கொடுத்த சாயர் அவர்களின் மறைவு புதிய கிறிஸ்தவர்களுக்கு பெரும் இழப்பாக காணப்பட்டது. தங்களுடைய இருப்பிடத்தைக் கொடுத்து தங்களை வாழ வைத்த அந்த மகானை அனுதினமும் நினைவு கூறும்படியாக அப்புதிய ஊரார் தங்கள் வசிப்பிடத்திற்கு சாயர்புரம் என்று பெயரிட்டனர். பிற்காலங்களில் சாயர்புரத்தை மையமாகக் கொண்டு ஊழியத்தினை நிறைவேற்ற வந்த கனம் G.U. போப் ஐயரவர்கள், திரு சாமுவேல் சாயர் அவர்கள் கொடுத்த நிலங்கள் இருந்தபடியினால் தான் நினைத்தபடி கல்வி நிலையங்களையும், கிராமத்தையும் நேர்த்தியாக உருவாக்க முடிந்தது என்று குறிப்பிட்டிருக்கின்றார். திரு. சாமுவேல் சாயர் அவர்களின் பணி உன்னதமானதாகும். இன்றும் சாயர்புரம் கிறிஸ்தவ கிராமமாக, கல்விப்பணியில் சிறந்து நிற்கின்றது.

### கேமரர் குளம் அல்லது புதுக்குளம்

நாசரேத் மிஷன் சரித்திரத்தில் மிகவும் பெயர் பெற்ற மிஷனெரிகளின் பட்டியலில் நாசரேத்தின் தந்தை என்று அழைக்கப்படும் கனம் மார்காஷியஸ் ஐயரவர்கள் இடம் பெறுவார்கள். கனம் மார்காஷியஸ் ஐயரவர்கள் நாசரேத்திற்கு வருகைத் தரும் முன்னதாக, நாசரேத் மக்களின் நல்வாழ்விற்கென்று தன்னை அர்ப்பணித்துக் கொண்டவர் அருள்திரு. கேமரர் ஐயரவர்கள். இவர் நாசரேத்தில் பிறந்தவர் ஆவார். இவரது பெற்றோர் SPCK ஊழியத்தின் மூலம் நடைபெறும் ஊழியத்தினை கனம். கோலப் ஐயரவர்களுடன் பார்வையிட வருகை தந்திருந்த போது 1804ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 3ம் தேதியன்று நாசரேத்தில் பிறந்தார். இளம்வயதிலேயே தன்னை கர்த்தருக்கென்று ஒப்புக்கொடுத்த கேமரர் அவர்கள் பள்ளிபடிப்பினை தரங்கம்பாடியிலும், தஞ்சையிலும் பின்னர் சென்னையிலும் கல்வி கற்றார். தன்னுடைய இறையியல் படிப்பினை கல்கத்தா பிஷப்ஸ் வேதாகம கல்லூரியிலும் பயின்றார். இறையியல் கல்விக்கு பின்னர் 1823ம் ஆண்டு வெப்பேரியில் சபை ஊழியராக தன் ஊழியத்தினை ஆரம்பித்தார். உதவி குருவானவராக, 1835ம் ஆண்டு நவம்பர் மாதம் 16ம் தேதி கொல்லம் ஆலயத்தில் குருப்பட்டம் பெற்றார். பின்னர் 1837, ஜனவரி 8ம் தேதி அன்று சென்னை பரி. ஜார்ஜ் பேராலயத்தில் குருப்பட்டம் பெற்றார்.

1838ம் ஆண்டு தன் ஊழியத்தினை நாசரேத்தின் மிஷனெரியாக தொடங்கி பல காரியங்களை செய்யலானார்.

கேமரர் ஐயர் அவர்களின் ஊழியத்தின் பலனாக பன்றிமடல், கடையனோடை, வகுத்தான்குப்பம், தேமாங்குளம் மற்றும் வெள்ளரிக்காயூரணி ஆகிய ஊர்களில் பல மக்கள் கிறிஸ்துவை ஏற்றுக்கொண்டு கிறிஸ்தவர்கள் ஆனார்கள். நாசரேத்திலும் புதியதாக சேர்ந்த கிறிஸ்தவர்களின் எண்ணிக்கை 1000க்கும் மேலாக உயர்ந்தது. கிறிஸ்தவர்களின் வளர்ச்சியில் பொறாமைக் கொண்ட மக்கள் கிறிஸ்தவர்களுக்கு விரோதமாக எழும்பினார்கள். அக்காலத்தில் தோன்றிய விபூதி சங்கம் மக்களை வெகுவாக துன்புறுத்தியது. நாசரேத்தினை முற்றுகையிட விபூதி சங்கம் திட்டமிடவே, நாசரேத் மக்களும் அவர்களை எதிர்கொள்ள ஆயத்தமானார்கள். இதனை அறிந்த கேமரர் ஐயரவர்கள் அரசு அதிகாரிகளை அணுகி, எதிரிகளை கைது செய்து மக்களை காப்பாற்றினார்.

கனம் கால்டுவெல் பேராயர் தவிர மற்றெந்த

குருவானவர்களும் கனம் கேமரர் ஐயவரவர்களைப் போன்று புத்தகங்களை எழுதவில்லை. அநேக புத்தகங்களை கேமரர் ஐயரவர்கள் எழுதியிருக்கிறார்கள். 1.புதிய ஏற்பாட்டுச் சரித்திரச் சுருக்கம்(1854) 2. பழைய ஏற்பாட்டுப் பெயர்களின் சரித்திர, பூசாஸ்திர அகராதி (1853), 3. புதிய ஏற்பாட்டு உள்ளடக்கம் (1854), சுருக்க ஜெபங்கள், சுவிசேஷ வாக்கியங்கள் இவற்றின் வியர்த்தி (1854), 5. பேய்லி எழுதின ஹோரே பாலினே (மொழி பெயர்ப்பு), 6. நிக்கொல் என்பவரின் ஞாயிறு ஆசரிப்புக்கான அப்பியாசங்களின் மொழிபெயர்ப்பு (1855), 7. சுவிசேஷங்களின் ஒப்புமை (1855), 8. நமதாண்டவரின் குணாதிசயங்களும் திருநாமங்களும் (1855), 9. போகாட்ஸ்கி என்பவரின் பொன்னிலையம் (மொழிபெயர்ப்பு), 10. சங்கீதாகமத்தின் விளக்கவுரை (1857), 11. எண்பத்தியாறு பிரசங்கக் குறிப்புகள், 12. ஆங்கில தமிழ் அகராதி போன்ற புத்தகங்கள் கனம் கேமரர் ஐயரவர்களால் எழுதப்பட்டவைகளாகும்.

கனம் கேமரர் ஐயரவர்களின் காலத்தில் தான் பிள்ளையன்மனை, மூக்குப்பீறி, அகப்பைக்குளம், கடையனோடை போன்ற ஊர்களில் ஆலயங்கள் கட்டப்பட்டது. கனம் கேமரர் ஐயரவர்களின் துணைவியார் திருமதி ஆனி கேமரர் அவர்கள் பெண்கள் கல்வியில் மிகுந்த நாட்டம் கொண்டு பெண்களை பள்ளிக்கு அழைத்துவந்து கற்று கொடுப்பதில் அதிக கவனம் செலுத்தினார்கள். கிறிஸ்துவை அறிவிப்பதிலும், புத்தகங்களை எழுதுவதிலும், பள்ளிக்கூடங்களையும் ஆலயங்களையும் கட்டுவதிலும் மட்டுமின்றி மக்களின் வாழ்வாதாரத்தை உயர்த்துவதற்காகவும் பல முன்னேற்ற பணிகளை மேற்கொண்டார்கள். அவ்வாறு கனம் கேமரர் ஐயரவர்கள் நாசரேத் மற்றும் அதின் சுற்றுபுற மக்களுக்கு செய்த மிக உன்னதமான தொண்டு எனில் அது நீர் ஆதாரத்தை ஏற்படுத்தியதே ஆகும். விவசாயம் செய்வதற்கு ஏதுவாக நீர் பிடிபகுதி தேவை என்று உணர்ந்த கனம் கேமரர் ஐயரவர்கள் புதிய குளம் ஒன்றினை அமைக்க திட்டமிட்டார்கள். இடத்தின் உரிமையாளர்களிடம் பேசி அந்த இடத்தை வாங்கி, ஆழப்படுத்தி புதிய குளம் ஒன்றினை நாசரேத் மக்களின் பயன்பாட்டிற்காக அர்ப்பணித்தார்கள். இக்குளத்திற்கு நாசரேத்தூர் மக்கள் கேமரர் குளம் என்று அழைக்கலாகினர். நாளடைவில் புதியதாக உருவாக்கப்பட்ட குளமாகவும் இது இருந்தபடியினாலே இது புதுக்குளம் என்றும் அழைக்கப்பட்டது. இன்றளவும் இக்குளத்தில் வரும் வருமானத்தில், அக்காலத்தில் குளம் அமைக்க நிலம் கொடுத்தவர்களின் வாரிசுகளுக்கு கிராம நிர்வாகத்தால் பணம் கொடுக்கப்பட்டு வருகிறது. அதுமட்டுமின்றி கனம் ஐயரவர்களின் காலத்தில் தான் சாண்பத்துக்குளம் என்ற குளமும் விரிவாக்கப்பட்டு கரைகள் பலப்படுத்தப்பட்டிருக்கின்றன. கனம் மார்காஷியஸ் ஐயரவர்களுக்கு அடுத்தாற்போல் நாசரேத் மக்களின் மனதில் நிற்பவர் கனம் கேமரர் ஐயரவர்களே. நாசரேத்தில் ஊழியத்தினை நிறைவு செய்து தஞ்சாவூரில் சிறிது காலம் ஊழியம் செய்து விட்டு ஒய்வெடுக்க தரங்கம்பாடி சென்றார். பின்னர் 1891ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 2ம் தேதி என்று ஓட்டத்தை முடித்து இறைவனின் இராஜ்யம் சென்றடைந்தார்.

## கொர்க்பிபுரம்

கிறிஸ்தியாநகரம் மிஷன் சரித்திரத்தில் கனம் கிறிஸ்துதாஸ் ஐயரவர்கள் இவ்வூர் குறித்து சிறு குறிப்பினை எழுதியிருக்கிறார்கள். ஊர் பெயரினை பார்க்கும் போது நிச்சயமாக ஒரு மிஷனெரியின் பெயரினை தாங்கிய ஊராக இது இருந்திருக்க வேண்டுமென்று புலப்படுகிறது. கனம் பெஸ்ட் ஐயரவர்கள் கிறிஸ்தியாநகரத்தில் ஊழியம் செய்த காலத்தில் இவ்வூர் ஏற்படுத்தப்பட்டிருக்க வேண்டும். துன்பப்படுத்தப்பட்ட கிறிஸ்தவர்களை காப்பாற்றுவதற்காக இவ்வூர் அமைக்கப்பட்டு கொர்க்பிபுரம் (Kirkbypuram) என்று பெயரிடப்பட்டுள்ளது. இவ்வூர் அநேக ஆண்டுகள் நிலைக்கவில்லை. 1869ம் ஆண்டு ஏற்பட்ட காலரா வியாதியினால் அநேக மக்கள் திருநெல்வேலி மிஷன் பகுதியில் மரித்துப்போனார்கள். அவ்வியாதி கொர்க்பிபுரத்தையும் விட்டுவைக்கவில்லை. இவ்வூரைச் சார்ந்த அநேக மக்கள் மரித்துப் போனார்கள் இரு குடும்பத்தை தவிர மற்றவர்கள் இவ்வூரை விட்டு வேறு இடத்திற்கு சென்று அங்கு குடியேறிவிட்டார்கள். இறுதியில் 1871ம் ஆண்டு இவ்வூரில் வசித்த இரண்டு குடும்பத்தினரும் வேறு இடத்திற்கு செல்லவே, கொர்க்பிபுரம் என்ற ஊர் அழிந்து மறைந்தது.

## ஷ்வார்ட்ஸ் ஐயர்புரம்



தென் இந்திய அப்போஸ்தலன் என்றழைக்கப்படும் கனம் C.F.வார்ட்ஸ் ஐயரவர்களின் நினைவாக கிறிஸ்தியாநகரத்தின் அருகே ஒரு ஊர் அமைக்கப்பட்டிருந்திருந்ததாக கனம் கிறிஸ்துதாஸ் ஐயரவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். இவ்வூர் தற்சமயம் எந்தப்பகுதி என்று கண்டுபிடிக்க இயலவில்லை. ஒரு வேளை இவ்வூரும் கொர்க்பிபுரம் போன்று மறைந்து போயிருக்கலாம். கனம் கோலப் ஐயரவர்களின் பெயரை தங்கள் ஊரான ஆதியாக்குறிச்சிக்கு வைக்க உத்தரவு கேட்கவே, கனம் ஐயரவர்களும் ஒப்புக் கொண்டார்கள். அதோடு நிறுத்தாமல் கிறிஸ்தவரான அக்குலத்தினரில் சிலர் வசித்து வந்த பாகத்திற்குத் தம் தந்தையின் நண்பரும் குலகுருவுமாயிருந்த காலஞ்சென்றிருந்த சங்கை ஷ்வார்ட்ஸ் ஐயரவர்களின் ஞாபகமாக **'ஷ்வார்ட்ஸ் ஐயர்புரம்'** என்று பெயர் சூட்டினார்.

எத்தனையோ ஊர்கள் நம் தேசத்தில் இருந்தாலும், நம்முடைய முன்னேற்றத்திற்காக வந்து, தங்கள் இன்னுயிரை இம்மண்ணுக்காகவும், மக்களின் முன்னேற்றத்திற்காகவும், இறையரசின் ஸ்தாபகத்திற்காகவும் வருகைத்தந்திருக்கின்ற மிஷனெரிகளை நம் வாழ்வில் ஒரு நாளும் மறக்ககூடாது. ஒவ்வொரு முறையும் இப்பெயர்களை நாம் கேட்கும் போது, இவர்கள் செய்த அரும்பெரும் தியாகத்தை உணர்ந்து, இன்னும் கிறிஸ்துவுக்குள்ளாக நம்மை திடப்படுத்துவதோடு, அவர்களின் அடிச்சுவடுகளில் நடப்பதற்கு நம்மை அர்ப்பணிக்க வேண்டும்.

**அருள்திரு . Hஜான் சாமுவேல் , பண்டார செட்டிவிளை**

**திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கத்தின் அன்பின் வாழ்த்துக்கள்.**

பூர்வ நாட்களை நினை; தலைமுறை தலைமுறையாய்ச் சென்ற வருஷங்களைக் கவனித்துப்பார்; உன் தகப்பனைக் கேள், அவன் உனக்கு அறிவிப்பான்; உன் மூப்பர்களைக் கேள், அவர்கள் உனக்குச் சொல்லுவார்கள். (உபாகமம் 32:7)

மோசே இஸ்ரவேல் ஜனங்களிடம் கூறும் போது **'பூர்வநாட்களை நினை; தலைமுறை தலைமுறையாய்ச் சென்ற வருஷங்களைக் கவனித்துப்பார்'** என்று கூறுகிறார். வரலாற்றின் பக்கங்களை நாம் திரும்பி பார்க்கும் போது, அநேக அனுபவங்களையும், பாடங்களையும் அவை நமக்கு கற்றுக் கொடுக்கின்றன.

பாதை தெரியாத நிலையில் இருக்கும் போது வரலாற்று சம்பவங்கள் நமக்கான பாதைகளை நமக்கு காட்டுகின்றன. (முன் நடந்ததே இப்பொழுதும் நடக்கிறது; இனி நடக்கப்போகிறதும் முன்னமே நடந்தது. (பிரசங்கி 3:15))

ஒவ்வொரு காலகட்டத்திலும் பல்வேறு வரலாற்று அறிஞர்கள் வரலாற்றை அதிக தியாகத்தோடும் அர்பணிப்போடும் தம் அடுத்த தலைமுறைக்கு மிகச் சிறந்த வழிகாட்டியாகவும் பொக்கிஷமாகவும் கொடுத்துள்ளனர். அதை போற்றுவதும் நம் அடுத்த தலைமுறையினருக்கு கொண்டு செல்வதும் நம் மேல் விழுந்த தலையாய கடமையாகும். அந்த அளப்பரிய பணியை செய்ய அர்பணிக்கப்பட்ட இயக்கங்களுள் திருநெல்வேலி **கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கமும்** ஒன்று.

திருநெல்வேலி **கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்** தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்கள் பலரின் அரும் பெரும் முயற்சியினால் தொடங்கப்பட்டது. நம்முடைய வரலாற்று சங்கத்தின் தரிசனத்தில், இறையியல் கல்லூரி மாணவர்கள் பலர் தன்னார்வத்தோடு தங்களையும் இணைத்து செயல்பட்டு வருகிறார்கள். மேலும் தமிழ்நாடு முழுவதும் உள்ள பல வரலாற்று ஆய்வாளர்களுடன் கைகோர்த்து இப்பணியைச் செய்து வருகின்றோம்.

ஒவ்வொரு காலகட்டத்திலும் ஆண்டவர் வரலாற்று காரியங்களைப் பதிவு செய்வதில் தமக்கு ஏற்ற இறைமக்களைப் பயன்படுத்துகிறார். வரலாற்றைப் பதிவு செய்வதில் பழைய ஏற்பாட்டில் மோசே, யோசுவா, எஸ்ரா ஆகியோரையும் புதிய ஏற்பாட்டில் நற்செய்தியாளர்கள் மத்தேயு, மாற்கு, லூக்கா, யோவான், பேதுரு, பவுல் ஆகியோரையும் அதிகமாக பயன்படுத்தி உள்ளதை நாம் பார்க்கிறோம்.

கிறிஸ்தவ வரலாற்றை பதிவு செய்யும் இறைபணியில் நம்முடைய திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கத்தையும் இறைவன் பயன்படுத்தவதை எண்ணி இறைவனுக்கு நன்றி செலுத்துகின்றோம்.

**நம் திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கத்தின் பத்து அம்ச செயல்திட்டத்தை நினைவுபடுத்துவதில் மகிழ்ச்சி அடைகின்றோம்.**

- தமிழ் கிறிஸ்தவ வரலாற்றில் நீண்ட இடைவெளிக்கு பின்பு மீண்டும் ஒரு வரலாறு படைத்துத்துக் கொண்டு இருக்கும் மாத ஆய்விதழ் தான் **'கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்'**. கடந்த 2020ம் ஆண்டு ஜூன் மாதம் முதல் ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு தலைப்பைக் கொண்டு பல்வேறு அரிய ஆய்வுக்கட்டுரைகளோடு மிக சிறப்பாக வெளி வந்து கொண்டிருக்கிறது. **மறைக்கப்பட்ட, மறந்த, மறைந்த** மிஷனரிகள் மற்றும் திருச்சபை வரலாறுகள், கள ஆய்வுகள், பல்வேறு அரிய வரலாற்று பொக்கிஷங்களுடன் தமிழகம் முழுவதும் தொடர்ந்து 1500 க்கு மேற்பட்ட வாசகர்களுடன் வந்து கொண்டு இருக்கின்றது.
- காலவோட்டத்தில் அறுபட்டுக்கிடந்த இசைத் தமிழ் கண்ணிகளைத் தற்கால இசைத் தமிழ் உலகுக்குக் கோர்த்துக் கொடுத்த மாபெரும் இசைத் தமிழ் அறிஞர் தஞ்சை ஆபிரகாம் பண்டிதர் அவருடைய அளப்பரிய செயல்களை நினைவுகூறும் வகையில் **ஆபிரகாம் பண்டிதர் நினைவு மின்னனு ஆராய்ச்சி நூலகம்** நம்முடைய சங்கத்தின் சார்பில் ஏற்படுத்தப்படுள்ளது. ஆபிரகாம் பண்டிதர் நினைவு ஆராய்ச்சி நூலகமானது தமிழ் கிறிஸ்தவ மின்னனு நூலகத்தில் **முதல் நூலகம்** என்ற சிறப்பைப் பெற்றது. இந்த நூலகமானது தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்களுக்கும், எழுத்தாளர்களுக்கும், தமிழ் கிறிஸ்தவ ஆராய்ச்சி மாணவர்களுக்கும் பயன்படும் வகையில் அமைக்கப்பட்டுள்ளது. தமிழ் கிறிஸ்தவ வரலாற்றில் ஒரு புதிய மைல்கல்லாகவும் அமையும். மேலும் அநேக புதிய தமிழ் கிறிஸ்தவ எழுத்தாளர்களை உருவாக்கவும், ஆராய்ச்சியாளர்களை உருவாக்கவும் இது உதவியாக இருக்கும் என்பதில் எவ்வித ஐயமுமில்லை.
- வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த, மறுபதிப்பு செய்து வெளியிடப்படாத கிறிஸ்தவ மிஷனரிகளின் வாழ்க்கை வரலாறு புத்தகங்களை மறுபதிப்பு செய்து வருகின்றோம். குறிப்பாக நெல்லை திருமண்டல வரலாற்று அறிஞர் பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் அவர்களுடைய படைப்புகளை மறுபதிப்பு செய்து இன்றைய தலைமுறைகளுக்கு கொண்டு செல்லவும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றோம். குறிப்பாக கடந்த ஆண்டு பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் அவர்களின் வரலாற்று சிறப்புமிக்க புத்தகம் அனைத்தையும் மறுபதிப்பு செய்து வருகின்றோம்.

- நம்முடைய வரலாற்று சங்கமும் கிறிஸ்தவ ஆய்வு மற்றும் ஆவணப்படுத்து மையமும் இணைந்து **'புத்தக வனம்'** செயலி செயல்பட்டுக் கொண்டு இருக்கின்றது. இந்த செயலி தமிழகத்தில் முதல் முறையாக டிஜிட்டல் முறையில் கையடக்க வடிவில் புத்தகமாக முழு நூலகமாக உங்கள் கைகளில் கொடுத்துள்ளோம். இன்னும் பல ஆயிரம் புத்தகங்களை பதிவேற்றும் பணி நடைபெற்றுக் கொண்டிருக்கின்றது. மேலும் பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் பெயரிலேயே **நினைவு புத்தக அங்காடி** ஒன்று ஏற்படுத்தப்பட்டுள்ளது.
- தமிழக வரலாற்றில் கிறிஸ்தவ மிஷனரிகளுடைய பங்கு குறிப்பிடத்தக்கது. அந்த மிஷனரிகள் பணி செய்த இடங்கள், அவர்களுடைய நினைவிடங்கள், தங்கியிருந்த இல்லங்கள், கல்லறைகள், வரலாற்று சிறப்புமிக்க ஆலயங்கள், இரத்த சாட்சிகளாக மரித்த மிஷனரிகள் பணி செய்த மற்றும் தங்களை இரத்த சாட்சியாக ஒப்புக்கொடுத்த இடங்களை தெளிவான முறையில் பார்வையிடவும், வெளியிடங்களிலிருந்து வரும் மக்களின் வசதிக்காகவும் **Mission Tourist Map** என்று செயலி உருவாக்கி அதன் மூலம் அவர்கள் தங்குமிடங்கள், வழித்தடங்கள் அடங்கிய மின்னியல் கையேடு அமைப்பது.
- வரலாற்றின் பக்கங்களில் மறைந்து கிடக்கும் கீர்த்தனை கவிஞர்கள், உபதேசிமார்கள், முன்னாள் குருமார்களுடைய வரலாற்று பொக்கிஷங்களை சேகரித்து வருகிறோம். மேலும் அவர்களுடைய வரலாற்று தகவல்கள், அவர்களால் உருவாக்கப்பட்ட திருச்சபைகள், கிறிஸ்தவ பாடல்கள் உருவாக்கம் பெற்ற வரலாறுகள், பாடல்களின் வரலாறுகளையும் சேகரித்து அதை மின்னியல் முறைக்கு மாற்றும் பணிகளையும் செய்து கொண்டு இருக்கின்றோம்.
- தமிழ் கிறிஸ்தவ பழைய புத்தகங்களை சேகரித்து மின்னியல் முறையில் ஆபிரகாம் பண்டிதர் நினைவு ஆராய்ச்சி நூலகத்திலும், பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் நினைவு புத்தக அங்காடியிலும் பதிவேற்றம் செய்வதுடன் புத்தகங்களை தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்களுக்கும், எழுத்தாளர்களுக்கும், ஆராய்ச்சி மாணவர்களுக்கும் பயன்படும் விதமாக ஒரு சிறந்த ஆய்வு நூலகம் அமைக்கவும் முயற்சிகளும் மேற்கொண்டு வருகிறோம்.
- மிஷனரிகளின் வாழ்க்கை வரலாற்று சம்பவங்களை அடிப்படையாக கொண்டு ஆவணப்படங்களை வெளியிடுவதற்கான முயற்சிகள் செய்து கொண்டு இருக்கிறோம். கர்த்தருக்கு சித்தமானால், வருகிற ஆண்டு ஒரு மிஷனரியின் வரலாற்றை ஆவணப்படமாக்க திட்டமிட்டிருக்கிறோம்.
- தங்களுடைய வசதியான வாழ்வை தியாகம் செய்து நம் நாட்டிற்கு வந்து கோதுமை மணிகளாய் விதைக்கப்பட்ட மிஷனரிகள் மற்றும் தன் சொந்த மக்களுக்காக தங்களையே அர்ப்பணித்த நம் இந்திய மிஷனரிகளின் நினைவிடங்கள் மற்றும் கல்லறைகளை கண்டறிவதுடன் திருச்சபையுடன் இணைந்து பராமரித்து அவர்களுடைய தியாகங்களை குறித்த விழிப்புணர்வை திருச்சபை மக்களுக்கு ஏற்படுத்த பணியாற்றி வருகிறோம்.
- வரலாற்று சங்கம் சார்பில் மிஷனரிகள் பயன்படுத்திய கலை பொருட்கள் மற்றும் புத்தகங்கள், பைபிள், சேகரித்து வரலாற்று **அருங்காட்சியகம்** அமைக்கும் பணியில் ஈடுபட்டிருக்கிறோம். மிஷனரிகள் பயன்படுத்திய பொருட்களை சேகரித்து வருகிறோம்.
- திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கம் சார்பாக வரலாற்று **ஆய்வுக் கருத்தரங்கம்** நடத்துவது வரலாற்று கள ஆய்வு பயிற்சிக்கான Workshop நடத்தும் பணிகளை மேற்கொண்டு வருகிறோம். அதற்கான ஆயத்தப்பணிகள் நடந்துகொண்டிருக்கிறது.

கிறிஸ்துவுக்குள் பிரியமானவர்களே, கடந்த 2017ம் ஆண்டு அற்பமாக ஆரம்பிக்கப்பட்ட நம்முடைய திருநெல்வேலி **கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்** இது வரையிலும் பல்வேறு தடைகளையும், நெருக்கடிகளையும் கடந்து வந்திருக்கிறது. வரலாற்று ஆய்வாளர்கள், ஆசிரியர்கள், வாசகர்கள், நண்பர்கள், நலன்விரும்பிகள் ஆகியோருடைய இடைவிடா ஜெபத்தாலும், ஆதரவாலும், உதவியாலும் நம் திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கம் தொடர்ந்து செயல்பட்டு வருகிறது. மேலும் நம்முடைய மாதாந்திர ஆய்விதழும் தடைகளின்றி வெளி வருகிறது. நம்முடைய கிறிஸ்தவ வரலாற்று சங்க செயல்பாடுகள் சிறப்பாக அமைய ஜெபத்தாலும், உடலுழைப்பாலும், பொருளாதார வழியிலும் உதவி வரும் அத்துணை நல்லுல்லங்களுக்கும் நன்றியினை தெரிவித்துக் கொள்கிறோம். தொடர்ந்து நாம் செயல்பட வேண்டிய தளங்கள் அநேகமுண்டு. இணைந்து செயல்பட அன்புடன் அழைக்கிறோம். வரலாற்று சங்கத்தின் ஓர் அங்கமாக வரலாற்றை அடுத்த தலைமுறைக்கு கொண்டு செல்லும் கருவியாவோம். சர்வ வல்லமை கொண்ட ஆண்டவரின் ஆயுதமாவோம்.

Federal Bank
Tinnevelly Christian Historical Society
Account number : 17480200003684
IFSC Code : FDRL0001748

christianhistorical@gmail.com

**சங்கத்தில் உறுப்பினராக இணைய**
**91767 80001**

WWW.
**tchsportal.co.in**



# ‘உன் ஜீவன் தப்ப ஓடிப்போ’

மன்னா செல்வகுமார்

விரிந்து பரந்த பாலைவனம் போன்ற மணற்பாங்கான பூமியில், நெடிதுயர்ந்த பனைமரங்கள் சோலையாய்ச் செழித்துநின்ற பகுதியில் பாங்குடன் இலங்கி வந்தது வீரவநல்லூர் என்னும் சிற்றூர். அதற்குச் சற்று தூரத்திலிருந்த நெடுவிளையில் சிலர் சுமார் ஐந்தாண்டுகளுக்கு முன் கிறிஸ்து மார்க்கத்தில் சேர்ந்து, அவ்வூரை ‘மெய்ஞானபுரமா’க்கியிருந்தார்கள். அதுபோல் இங்கும் ஏற்பட்டுவிடக்கூடாது! வீரவநல்லூர் என்ற பெயர் வேறொரு நல்லூராகிவிடலாகாது! ஜாக்கிரதையாயிருக்கவேண்டும். ஆம், ஜாக்கிரதையாகவேயிருந்தனர் அவ்வூரார். ஆகையால் நெடுவிளையில் கிறிஸ்து மார்க்கத்தைத் தோற்றுவித்த ரேனியஸ் ஐயர், வீரவநல்லூரில் பாய்ச்சின ஜீவதண்ணீரான வசனம் விழலுக்கு இறைத்த நீராயிற்று. ஆனால் ஐந்தாண்டுகள் மட்டும் தான். ஐந்தாமாண்டின் முடிவில் 1832 ம் வருடம் வீரவநல்லூரிலும் கூட கிறிஸ்துமார்க்கம் தோன்றிவிட்டது! அவ்வூராரிற் சில மக்கள் விசுவாசிகளாகிச், சபையில் சேர்ந்தார்கள்.

உடனே புறமதத்தினர் அவர்களை உக்கிரமாய் எதிர்த்து, அடித்துத் துன்புறுத்தவாரம்பித்தனர். கொடிய உபத்திரவ முண்டாயிற்று. வேதனையின் காலம் நீடித்துக்கொண்டே போயிற்று. அத்துயர நாட்களில் அவர்களுக்காறுதல் கூறி, தைரியப்படுத்தியவர் மெய்ஞானபுரம் உபதேசியாரான மிகாவேல் என்னும் பக்தன். உலகப்பிரகாரமான உதவிகளொன்றும் அவரால் செய்யமுடியாதெனினும், அவர் கூறின ஆறுதலும் அதில் தொனித்த அன்பும் அப்புதுக் கிறிஸ்தவர்களை ஊக்கப்படுத்தின.

இச்செய்திகளனைத்தையும் கேள்விப்பட்ட ரேனியஸ் ஐயர், 1833 ல் மறுபடியும் அவ்வூருக்குச்சென்று, அம்மக்களை அவ்வூரினின்று எடுத்து வேறோரூரில் குடியேற்றாதுபோனால், அவர்களனைவரும் மருளவிளக்கூடுமென்று எண்ணி, வீரவநல்லூருக்குச் சற்று அப்பால் ஒரு பூமியைவாங்கி, கிறிஸ்தவர்களனைவரும் அதில் குடியேறுங்கள் என்று கட்டளையிட்டார்.

ஆனால், அவர்களுக்கோ அது பிரியமில்லை. வீடுவாசலை விட்டுப்போவதா? முடியாது! பூர்வ பாத்தியதையை விட்டு விடுவதா? கூடாது, கூடாது! ஆனால் ஐயர் விட்டபாடில்லை. துன்பம் நீடித்தால் மறுதலித்துப் போனாலும் போய்விடுவார்களே என்ற பயம் அவருக்கு. ஆகையினால், (அதைச் சொல்லாமலே) அவர்களைக் கட்டாயப்படுத்தினார். கடைசியில், பதினைந்து வீட்டார் மட்டும், மனமின்றிச் சம்மதித்து அம் மாதமே (செப்றெம்பர் 1833) புதிய பூமியில் வீடுகட்டிக் குடியேறினர்.

அவர்கள் குடியேறிய மறுநாளே, வீரவநல்லூரில் காலரா தோன்றிவிட்டது. பலர் மாண்டனர். அது கண்ட புதுக்குடித்தனக்காரர், தங்களைக் கட்டாயப்படுத்தி வெளியேற்றின ரேனியஸ் ஐயரை மனமாற வாழ்த்தி, சாவுக்கினமான இடத்திலிருந்து ஆரோக்கியம் நிறைந்த இடத்திற்கு வந்து குடியேறியிருக்கிறோம் என்று கூறித், தங்கள் குடியேற்றத்திற்கு ஆரோக்கியபுரம் என்று பெயர்வைத்தார்கள்.

# ‘பட்சிக்கிறவனிடத்திலிருந்து பட்சணமும்’

மன்னா செல்வகுமார்

பரந்து பல பிரிவுகளாகக் கிடந்தது பேய்க்குளம் என்னும் கிராமம். அதில் ஒரு பகுதியில் ஒரு குறிப்பிட்ட சமுக குல மக்கள் வசித்து வந்தனர். எங்கும் சென்று சுவிசேஷங் கூறி வந்த ரேனியஸ் ஐயர் பேய்க்குளத்துக்கும், பல தடவைகள் சென்று நற்செய்தி கூறி, இரட்சிப்பின் வழியில் சேர்ந்து கொள்ளுமாறு அவ்வூர் வாசிகளிடம் கேட்டு வந்தார். பல ஆண்டுகளாகப் பயனெதுவுமில்லை. ஆனாலும் அந்த குலத்தாரின் குடியிலிருந்த சிலருள்ளங்களில், அவர் கூறிப் போன சத்தியங்கள் நாளடைவில் உயிர் பெற்று உணர்வூட்ட வாரம்பித்தன. ஆவியானவர் அவர்களை நடத்தினார்.

1827-ல் ஒரு நாள் அவர்கள் ரேனியஸிடம் சென்று தாங்கள் கிறிஸ்துமார்க்கத்தில் சேர விருப்பம் கொண்டிருப்பதைத் தெரிவித்து, ஞானஸ்நான ஆயத்தக்காரராகச் சேர்த்துக் கொள்ளப்பட்டார்கள். மேலும் அம்மிஷனெரி, தனக்கு ஊழியத்தில் வலது கையாக விளங்கின தாவீது உபதேசியாரை அவர்களுடனனுப்பி, அவர் அவ்வூரில் சில நாட்கள் தங்கி, அம்மக்களை விசுவாசத்தில் உறுதிப்படுத்தி நிலை நிறுத்திவரக் கட்டளையிட்டார்.

தாவீது உபதேசியார் வெள்ளாள வகுப்பினர். தஞ்சாவூர்க்காரர். உண்மைப் பக்தன், உத்தம விசுவாசி, திடச் சித்தமுள்ள மனிதர், காரிய சமர்த்தன். ரேனியஸ் ஐயரின் காலத்தில் திருநெல்வேலியில் திருச்சபையை உறுதியுடன் உருப்படுத்தியமைப்பதில் வேறெந்த இந்திய ஊழியர்களையும் விட அதிகமாயுழைத்தவர் இத் தாவீதுபதேசியார்.

அவர் அம்மக்களுடன் தங்கியிருந்த நாட்களில் பேய்க்குளம் சபையாருக்கு எவ்வித எதிர்ப்பும் உண்டானதில்லை. ஆனால் அவர் பாளையங்கோட்டைக்குத் திரும்பிச் சென்றதும், அவர்களுக்குச் சோதனைக் காலம் தொடங்கிற்று. அக்கிறிஸ்தவ மக்களும் அவர்களைச் சேர்ந்தவர்களும் குடியிருந்த நிலம் பேய்க்குளம் அக்கிரகாரத்திலிருந்த ஒருவருடையது. அப் பிராமணர் கிறிஸ்தவர்கள் தங்கள் புதிய மதத்தைத் துறந்து, மறுபடியும் பழைய மதத்திற்குத் திரும்ப வேண்டுமென்றும், அப்படிக்கில்லாத பட்சத்தில் தங்கள் வீடுகளைக் காலி பண்ண வேண்டுமென்றும் அவர்களுக்குக் கட்டளையிட்டார். அவ் வேழைமக்கள் எங்கே போவார்கள்? அல்லது, எப்படி அவர்கள் தங்கள் ஆண்டவரை மறுதலிப்பார்கள்? வருவது வரட்டும் என்று வாளாவிருந்து, தங்களுக்கு வந்த துன்பங்களை யெல்லாம் பொறுமையுடன் சகித்துக்கொண்டார்கள். அப்பெருந்தனக்காரரான பிராமணரால் அவர்களுக்குண்டான உபத்திரவங்களை இவண் வர்ணித்து வரையவியலாது.

அவ்வேழை மக்கள் மீது அனுதாபங்கொண்ட வேறொரு அந்தணப் பெருமகனும் அவ்வக்கிரகாரத்திலிருந்தார். அவர் அவ்வெழியவர்களுக்கு உதவ முன்வந்து, ஊருக்குச் சற்று தள்ளித், தனக்குச் சொந்தமாயிருந்த ஒரு நிலத்தை அக் கிறிஸ்தவர்களின் குடியேற்றமாக இனாமாளிக்க விரும்பித், தன் எண்ணத்தை ரேனியஸ் ஐயருக்குத் தெரியப்படுத்தினார். ஏற்கெனவே, பேய்க்குளம் கிறிஸ்தவர்களை மிஷன் பூமி யொன்று வாங்கி அதில் குடியேற்ற உத்தேசித்திருந்த ரேனியஸுக்கு இது கடவுள் தரும் ஈகை யெனப்பட்டது. அவர் கர்த்தரைத் துதித்து, அந்தணச் சீமானுக்கு நன்றி சொல்லித் தாவீதுபதேசியாரை அனுப்பி அந்நிலத்தைப் பெற்றுக் குடியேற்ற நடபடிக்கைகளை மேற்கொள்ளக் கட்டளையிட்டார். அவரும் பேய்க்குளம் சேர்ந்து, அந்நாளின் வழக்கத்தின்படி, இனாமாயளிக்கப்பட்ட நிலத்தில் கொடையாளியும் கொடை பெறுவோனும் பனையோலை நட்டிப் பொருள் மாற்றம் செய்யும் முறையின்படி, ஓலை நட்டு நிலத்தைப் பெற்றார்.

பின் 1828-ம் ஆண்டிலொருநாள் ரேனியஸ் அங்குச் சென்று, அதில் குடியேற விரும்பிய பதினைந்து கிறிஸ்தவக் குடும்பத்தாருக்கு வீடு கட்டிக்கொள்ள மனைகளைக் குறிப்பிட்டுத், தெருவமைத்து, அதின் தலைப்பில் தேவாலயக் கட்டிடத்துக்கும் இடம் வகுத்து,

அப்புதுக் குடியேற்றத்துக்கு ஆசீர்வாதபுரம் என்ற அழகிய பெயரை வைத்து, ஜெபித்து ஆசீர்வதித்தார். வெகு விரைவிலேயே அப்பதினைவரும் தங்களுக்குக் குறிக்கப்பட்ட இடங்களில் வீடு கட்டிக் குடிபுகுந்தார்கள். கூடவே ஜெபாலயத்தையும் கட்டி முடித்தார்கள்.

இதையெல்லாம் கண்ட முதற் பிராமணர் நில மீந்த பிராமணரிடம் போய் அவர் செய்கையைக் கண்டித்து, மூர்க்கமாய்ப் பேசினதுமன்றிக் கிறிஸ்தவர்களையும் துன்புறுத்துவாராகி, ஆட்களை வைத்து அம்மக்களை அடித்து, வீட்டுக் கூரைகளைப் பிய்த்தெறிந்து, ஜெபாலயத்தையும் தீக்கிரை யாக்கினார். இச் செய்தி கேள்விப்பட்ட ரேனியஸ் உடனே தாவீதுபதேசியாரை ஆசீர்வாதபுரத்துக்கனுப்பினார்.

தாவீதுபதேசியார் அங்கு போய், மக்களைத் துன்புறுத்திய பார்ப்பனரையும், பிறரையும் கண்டு, கண்டித்துப் பேசி, அவருடைய குற்றத்தை அவருக்கு உணர்த்த, அம்மனிதர் தன் குற்றத்தை ஒப்புக்கொண்டு, இனிமேல் கிறிஸ்தவர்களுக்குத் தன்னாலொரு துன்பமும் நேரிடாது என்று உறுதி கூறி, அவ்வுறுதிக்கடையாளமாக, ஆசீர்வாதபுரம் எல்லையில் தனக்குச் சொந்தமாயிருந்த நிலத்தை இனாமாயளித்தார்! முதலில் கிடைத்த குடியேற்று நிலம் கிறிஸ்தவர்களனைவரும் குடியேறிக் கொள்வதற்குப் பற்றாதிருந்ததால், இப்புதிய நிலம் வெகு அவசியமாகவேயிருந்தது! வேண்டியதாயிருந்த பூமி விரோதியிடமிருந்தே கிடைத்தது சிங்கத்தினின்று கிடைத்த தீஞ்சுவைத் தேன் போன்றில்லையா?

# நாதனின் நாமத்துக்கே புகழ்

சுஜித்

'ரிஷி ரிங்கல்ற்றாபே' என்று இந்திய மிஷனெரிச் சரிதையில் புகழப்பட்டுள்ள மிஷனெரி முனிவர் S. P. C. K. சங்கத்தாரால் அனுப்பப்பட்டு, 1806-ம் ஆண்டு முதல் சிலகாலம் நெல்லைச் சபைகளை மேற்பார்வை செய்து வந்தார். 1806-ம் ஆண்டு நவம்பர் மாதம், அது அடைமழை காலமாயிருந்தாலும், கடமையுணர்ச்சியாலுந்தப்பட்டுத் தென் கீழ்ப் பகுதிகளிலுள்ள சிறு சிறு சபைகளைச் சந்திப்பாராய்ப், படுக்கப்பத்தைப் பார்வையிட்டுச் சுண்டங்கோட்டைக்குச் செல்லும் வழியிலுள்ள ஒரு சிறு கிறிஸ்தவக் குடியேற்றத்தைக் காணச்சென்றார். அச்சிற்றூரில் ஒரு சிறு கிறிஸ்தவச் சிற்றாலயம். அன்று (21-ம் தேதி) நல்ல மழை. ஊருக்குள் தங்கள் மிஷனெரி மழையில் நனைந்து கொண்டு வந்ததைக் கண்ட அவ்வூரார், ஓடோடிச் சென்று, அவரை மகிழ்வுடன் வரவேற்றுத், தங்கள் ஆலயத்தைத் திறந்து, அதில் அவரைத் தங்கச் செய்து உபசரித்து உவகை கொண்டனர்.

அவர் தம்மருமை மக்களைக் கண்ட தந்தை போலக் களிப்படைந்து, முற்றுந்துறந்த முனிவராகிய தான் அவர்களுக்குக் கொடுக்கக்கூடிய ஆத்ம ஆகாரத்தையே கொடுக்க முற்பட்டார். அம்மக்கள் அவரைச் சூழ்ந்துட்கார, அவர் அவர்களுக்கு அரிய உபதேசங்களைக் கூறிக் கிறிஸ்தவ மெய்யறிவையூட்டினார்.

சற்றுநேரங்கழித்து, மழை நின்றவுடன், அவர் சுண்டங்கோட்டைக்குப் போகப் புறப்பட்டார். அவரை வழியனுப்பக் கூடி நின்ற சபையார் ஐயா, 'எங்களூருக்கு ஒரு பெயர் வைக்க வேண்டும். தங்களது பெயரையே எங்கள் கிராமத்துக்குக் கொடுக்க விரும்புகிறோம். அதைத் தாங்கள் அனுமதிக்க வேண்டும்,' என்று கேட்டார்கள். அவர் சற்று யோசித்தார். பின், "வேண்டாம். என் பெயரையிட வேண்டாம். இயேசு ரட்சகருக்குப் புகழ் தந்த ஒரு ஊரின் பெயரை வையுங்கள். அவருக்கு மகிமை தந்த ஊர்களிலொன்று கானான் நாட்டிலிருந்த நாயீனூர். அவ்வூரின் பெயரை வைப்போமா?" என்று கேட்டார். அம்மக்கள் முழு மனதுடன் சம்மதம் தெரிவித்தனர். அவர் மனம் மகிழ்ந்து அச்சிற்றூருக்கு 'நாயீனூர்' என்று பெயர் சூட்டிப், பின் தன் வழியே சென்றார்.

# கவிதா சரண்

## அவர்களின் இலக்கியப் பங்களிப்பு

- யாழினி முனுசாமி

கவிதாசரணின் இயற்பெயர் மு.சண்முகம். திருச்சி மாவட்டம் புத்தனாம்பட்டியில் பதினொன்றாம் வகுப்பு வரை படித்தார். பிறகு திருச்சி நேஷனல் கல்லூரியில் இன்டர்மீடியட் படித்தார். அதன்பிறகு கணிதப் பிரிவில் பட்டப்படிப்பை சென்னை சர்தியாகராயா கல்லூரியிலும் எம்.ஏ ஆங்கில இலக்கியத்தை சென்னைப் பல்கலைக்கழகத்திலும் எம்.எஸ்சி கணிதம் மற்றும் எம்எட் பட்டமேற்படிப்புகளை அண்ணாமலைப் பல்கலைக்கழகத்திலும் பெற்றார்.

1958 முதல் ஆசிரியப் பணியைத் தொடங்கினார். சென்னை வண்ணாரப்பேட்டையில் உள்ள கே.சி. சங்கரலிங்க நாடார் மேல்நிலைப்பள்ளியில் கணித ஆசிரியராகவும் ஆங்கில ஆசிரியராகவும் 1964 ஆண்டிலிருந்து 1989 ஆண்டு வரை பணிபுரிந்தார். பள்ளியில் பணிபுரிந்த பொழுது கண்டிப்பான ஆசிரியர் என்று பெயர் எடுத்தவர்.

1953 இல் இருந்து கவிதைகள் எழுதிய தொடங்கிய இவரின் கவிதைகள். 'கவிதை மலர்கள்' என்கிற பெயரை முதல் புத்தகமாக 1963இல் வெளிவந்தது. கண்ணதாசன் ஆசிரியராக இருந்த தென்றல், இன முழக்கம் ஆகிய இதழ்களிலும், கருமுத்து தியாகராசர் ஆசிரியராக இருந்த தமிழ்நாடு எனும் செய்திப் பத்திரிகையிலும் இவருடைய படைப்புகள் வெளிவந்துள்ளன.

1965 இல் ஆனந்தவிகடனில் இவருடைய கவிதை கட்டுரை கதைகள் வெளிவந்துள்ளன. எனக்குப் பிடித்த புத்தகம் தொடரில் புஷ்கின் எழுதிய ஒரு நாவல் குறித்தும் ஆனந்த விகடனில் எழுதியுள்ளார். அதற்கு அப்பொழுதே 550 ரூபாயை ஆனந்தவிகடன் இவருக்கு சன்மானம் அனுப்பி இருக்கிறது. தொடர்ந்து 1973ஆம் ஆண்டு வரை அவரது பெரும்பான்மையான நூல்கள் வெளிவந்தன. 1973ஆம் ஆண்டு சந்திப்பு, பொற்கனவே போய் வா, சரண், புழுதிக் கோலம், அன்னையும் கன்னியும், மாதவிக் கொடி, தெய்வம் தெளிமின் ஆகிய நூல்கள் வெளிவந்தன. அக்டோபர் 21, 1991 கவிதாசரண் முதல் இதழை வெளியிட்டார். கடைசி இதழ் மார்ச்சு மாதம் 2009 இல் வெளிவந்தது. 18 ஆண்டுகள் தொடர்ந்தும் அவ்வப்போது இடைவெளி விட்டும் கவிதாசரண் இதழை வெளியிட்டு வந்தார். மனைவி பெயர் நாகலட்சுமி . ஆனால் திருமதி கவிதாசரண் என்றே அவர் அறியப்பட்டார். இவர்களின் மகன் பெயர், சுடர்முடி. 1971ஆம் ஆண்டு பிறந்த சுடர்முடி 1989 ஆம் ஆண்டு 17 வயதில் இறந்துவிட்டார். மகனை இழந்த துயரில் இருந்து விடுபடும் முயற்சியாகவே இவர் கவிதாசரண் இதழைத் தொடங்கினார்.

தொடக்க காலத்தில் மு. சண்முகம் என்கிற இயற்பெயரிலேயே எழுதிவந்த இவர், 1973 இல் தன் பெயரை கவிதாசரண் என்று மாற்றிக் கொண்டார். முத்து நிலா, கவிதாமணி, முசா ஆகிய புனைபெயர்களிலும் எழுதியுள்ளார். கவிதாமணி என்கிற பெயரில்தான் அதிகமாக எழுதியுள்ளார். இதுவரை 20 புத்தகங்கள் வெளிவந்திருக்கின்றன.

கவிதாசரணின் வாழ்நாள் சாதனையாக அவர் செய்த பணி என்னவென்றால், இராபர்ட் கால்டுவெல்லின் திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணமான A COMPARATIVE GRAMMAR OF THE DRAVIDIAN OR SOUTH INDIAN FAMILY OF LANGUAGES என்கிற ஆங்கில நூலின் மூலப்பிரதியை நீக்கப்பட்ட பகுதிகளையும் சேர்த்து சிதையாமல் பதிப்பித்து தன் வீட்டை அடகு வைத்து வெளியிட்டதாகவும். இத்தகைய சிறப்பு வாய்ந்த கவிதாசரண் அவர்கள் 28. 11. 2021 அன்று திருச்சியில் திருவானைக்கோவிலில் காலமானார்.

அவருடைய இலக்கியப் பங்களிப்பும் இதழ்ப் பணியும் பதிப்புப் பணியும் நீடுநினைவு கூறப்படும். அவர் புகழும் நிலைத்திருக்கும்.





கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கத்தின் மாத இதழை தமிழ் வரலாற்று அறிஞர்களை சந்தித்து கொடுத்த பொழுது எடுத்த படங்கள்


நெல்லை அப்போஸ்தலர் கனம் ரேனியஸ் அவர்களின் 231 வது பிறந்த நாள் மெய்ஞானபுரம் சபையார்


திருமண்டல நூலக இயக்குனர் அருள்திரு மேசியா தாஸ் அவர்களுடன்


தாராபுரம் பெத்தேல் ஆலய ஆயர் ஜெயராஜ் அவர்களுடன் நமது செய்தியாளர்


தாராபுரம் பெத்தேல் ஆலய செயலாளர் திரு ரூபன் அவர்களுடன் நமது செய்தியாளர்


தாராபுரம் பெத்தேல் ஆலய பொருளாளர் திரு ராஜேஷ்அவர்களுடன் நமது செய்தியாளர்


திரு தாமஸ் அண்ணன் அவர்களுடன்


டோரா மற்றும் இவாஞ்சலீன் அக்கா அவர்களுடன்


திரு பிரான்சிஸ் அவர்கள் நம்முடைய சங்க உறுப்பினருடன்

1 இலட்சம் நபர்களை
வேதாகமம் எழுதச் செய்யும்
மாபெரும் தரிசனத்துடன்.. புதிய அர்ப்பணிப்பில்..

# கையெழுத்து வேதாகமம்

**நீங்கள் விரும்பும் மொழியில், உங்கள் கைகளால்... உங்களுக்காக**

(முன்பதிவு செய்வோருக்கு மட்டும்)




## சிறப்புச் சலுகை

**ரூ.1000/-** தபால் செலவு தனி

## தினமும்
## 10 வசனம் எழுதுங்கள்

## மகிழ்ச்சியால்
## வாழ்வை நிரப்புங்கள்

- A3 அளவு, 9 கிலோ எடை, 1500 பக்கங்கள் கொண்ட புத்தகம் தரப்படும்.
- வேதாகமத்தில் உள்ளது போன்று 55 வரிகள் அச்சிடப்பட்டிருக்கும்.
- வரிகள் பிறழாமல் பக்கங்கள் மாறாமல் எழுத வேண்டும்.
- வயது வித்தியாசமின்றி அனைவரும் பங்கு பெறலாம்.
- எழுதி முடிக்கப்பட்ட வேதாகமம் உங்களுக்கானது.
- எழுதி முடித்தவர்களின் பெயர் வேதாகம ஆராய்ச்சிக் கழகம் Book of Records-ல் பதிவு செய்யப்படும்.



3 வருடத்தில்
முழு வேதாகமம்
எழுதி
முடிப்பவர்களுக்கு
**வேதாகம**
**சாதனை வீரர்**
சான்றிதழ்
வழங்கப்படும்.

இது எங்கள் தாத்தா எழுதிய வேதாகமம்; இது எங்கள் பாட்டி எழுதிய வேதாகமம்
என்று தலைமுறையினர் கொண்டாடி மகிழும் சாதனைக்கு ஓர் வாய்ப்பு!

**இச்சாதனையில் பங்குபெற விரும்புவோர்**
**HAND BIBLE என Type செய்து, உங்கள் பெயர், முகவரியை**
**Whatsapp (9884120603) எண்ணிற்கு அனுப்பவும்**

**வேதாகம நண்பன்**
9/3, வீரசாமி 2வது தெரு, அயனாவரம், சென்னை-23.
9884120603 | 72002 34145 | 044 - 2647 1115
e-mail : info@bible2bible.com | www.bible2bible.com
**G- Pay, Whatsapp - 9884120603**